உ



கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# திருக்கூடலையாற்றூர்ப் புராணம்.

---

இது

சிதம்பரத்தைச் சார்ந்த கலியமலை வித்வான்

ந. சந்திரசேகர நாயகர் அவர்களால்

இயற்றப்பட்டு,

சூரியனார்கோவில் ஆதீனத்தைச் சார்ந்தவரும், திருக்கூடலையாற்றூர்

வாசியுமாகிய தருமநல்லூர்

**சுவாமிநாத தம்பிரான் சுவாமிகளால்**

சிதம்பரம் ஸ்ரீ குஞ்சிதசரண அச்சியந்திரசாலையில்

1 முதல் 72 பக்கம் வரையிலும்,

சென்னை ஜூபிடர்பிரஸ்ஸில்

மற்ற பக்கங்களும் சிறப்புப் பாயிரங்களும்,

பதிப்பிக்கப்பெற்றது.



1934.

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# திருக்கூடலை யாற்றூர்ப் புராணம்.

---

இது

சிதம்பரத்தைச் சார்ந்த கலியமலை வித்வான்

ந. சந்திரசேகர நாயகர் அவர்களால்

இயற்றப்பட்டு,

சூரியனார்கோவில் ஆதீனத்தைச் சார்ந்தவரும், திருக்கூடலை யாற்றூர்

வாசியுமாகிய தருமநல்லூர்

**சுவாமிநாத தம்பிரான் சுவாமிகளால்**

சிதம்பரம் ஸ்ரீ குஞ்சிதசரண அச்சியந்திரசாலையில்

1 முதல் 72 பக்கம் வரையிலும்,

சென்னை ஜூபிடர்பிரஸ்ஸில்

மற்ற பக்கங்களும் சிறப்புப் பாயிரங்களும்,

பதிப்பிக்கப்பெற்றது.



1934.

# முகவுரை.

---

புண்ணிய பூமியாகிய பாரதகண்டத்து நடுநாட்டுத் திருப்பதிகளில் மூர்த்தி, தலம், தீர்த்த மென்னும் முத்திறத்தானுஞ் சிறப்புற்றுச், சைவசமயக்குரவராய ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகளால் திருப்பதிகம் பெற்றுத்திகழும் திருக்கூடலை யாற்றூர் என்னும் திவ்ய க்ஷேத்திரத்தின் மகிமையை யாவருமறிந்து ஈடேறுவான் வடமொழியினின்றும் திருவாளர், பாளையங்கோட்டை - சரவணப்பிள்ளையவர்களாலும், பேரூர்-கிருஷ்ணப்பிள்ளை யவர்களாலும், திருக்கூடலையாற்றூர்-கோயில் - மணியம் - நல்ல சிவன்பிள்ளை யவர்களும் பொருட் செலவிட்டு முயற்சித்து மொழிபெயர்க்கப்பட்ட கத்திய ரூபமான திருக்கூடலையாற்றூர்ப் புராணத்தை அச்சிடுவித்துச் சென்ற ஆங்கிரச வருடம் ஆடிமாதத்தில் (20-7-1932) வெளியிட்டுள்ளேன்.

அப்புராணம் செய்யுள்வடிவாக வெளிவரவேண்டு மென்னும் அவாவினால் யான் ஷை நல்ல சிவன்பிள்ளை யவர்கள், காவலன் குடி திருவாளர்- இரத்தினபடையாட்சி யவர்களுடன் கூடி விரும்பிய வண்ணம் கலியமலை-வித்துவான் ந. சந்திரசேகர நாயகரவர்கள் மேற்கண்ட மொழிபெயர்ப்புடன்-ஷை கோயில் புதிய திருப்பணியியற்றியவர்களும், தருமவிசாரணைத் தலைவருமான திருவாளர்-தேவகோட்டை, சத்திரம்-ராம-அரு-அரு-ராம அருணாசலஞ் செட்டியவர்கள் புதிதாக மொழிபெயர்த்துள்ள மொழிபெயர்ப்புக் கிணங்க இந்நூலை இயற்றித் தந்தார்கள். இவர்கள் வைணவ மரபினராக விருந்தும், இத்தலத்தில் மிகப் பற்றுதலுடைமையான் எங்களுடைய மனப்பான்மைக் கிணங்கப் பொதுநோக்கால் இயற்றித்தந்த இவ்வுதவிக்கு யாங்களே யன்றிச் சைவாபிமானிகள் பலரும் நன்றிசெலுத்துங் கடப்பாடுடையவர்களேயாம்.

இந்நூல் அச்சிடுவதற்குப் பொருள் உதவிசெய்த திருவாளர் ஷை செட்டியார் அவர்களுடையவும், கூடலையாற்றூர், காவலன்குடி முதலிய பல கிராமங்களிலுமுள்ள சைவாபிமானமுடைய வேளாண் மரபினருடையவும், வன்னிகுல க்ஷத்திரிய மரபினருடையவும் ஆன பேருதவி எழுமையும் மறக்கற்பால தன்று.

யான் மேற்கொண்ட இத்தகைய பெருஞ்செயலைத் தோன்றாத் துணையாயிருந்து முற்றுவித்தருளிய ஸ்ரீ நிருத்தனவல்லபேசுரருடைய பெருங்கருணையைச் சிந்தித்து வந்திக்கின்றனன்.

திருக்கூடலையாற்றூர்.<br>3—6—34.<br>பவ ஞு வைகாசி மீ 21 உ.

திருக்கூடலை யாற்றூரில் வசிக்கும்<br>சூரியனார் கோவில் ஆதீனத்<br>தைச் சார்ந்தவராய

தருமநல்லூர் சுவாமிநாத தம்பிரான்,

# விஷய அட்டவணை.



எண்-பக்களண்.

## முகவுரை.



## நூல்.

உ

சிவமயம்.

# திருக்கூடலையாற்றூர் தேவாரம்.

---

## சுந்திரமூர்த்திநாயனர்.

பண்—புறநீர்மை.

திருச்சிற்றம்பலம்.

வடிவுடை மழுவேந்தி மதகரி யுரிபோர்த்துப்
பொடியணி திருமேனிப் புரிகுழ லுமையோடுங்
கொடியணி நெடுமாடக் கூடலை யாற்றூரி
லடிகளிவ் வழிபோந்த வதிசய மறியேனே. (க)

வையக முழுதுண்ட மாலொடு நான்முகனும்
பையிள வரவல்குற் பாவையொ டும்முடனே
கொய்யணி மலர்ச்சோலைக் கூடலை யாற்றூரி
லையனிவ் வழிபோந்த வதிசய மறியேனே. (உ)

ஊர்தொறும் வெண்டலைகொண் டுண்பலி யிடுமென்று
வார்தரு மென்முலையாள் மங்கையொ டும்முடனே
கூர்நுனை மழுவேந்திக் கூடலை யாற்றூரி
லார்வனிவ் வழிபோந்த வதிசய மறியேனே. (ங)

சந்தண வும்புனலுந் தாங்கிய தாழ்சடையன்
பந்தண வும்விரலாள் பாவையொ டும்முடனே
கொந்தண வும்பொழில்சூழ் கூடலை யாற்றூரி
லந்தணன் வழிபோந்த வதிசய மறியேனே. (ச)

வேதியர் விண்ணவரு மண்ணவருந் தொழநற்
சோதிய துருவாகிச் சுரிகுழ லுமையோடுங்
கோதிய வண்டறையுங் கூடலை யாற்றூரி
லாதியிவ் வழிபோந்த வதிசய மறியேனே. (ரு)

வித்தக வீணையொடும் வெண்புரி நூல்பூண்டு
முத்தன வெண்முறுவன் மங்கையொ டும்முடனே
கொத்தல ரும்பொழில்சூழ் கூடலை யாற்றூரி
லத்தனிவ் வழிபோந்த வதிசய மறியேனே. (சு)

மழைநுழை மதியமொடு வாளர வஞ்சடைமை
விழைநுழை துகிலல்கு லேந்திழையா ளோடுங்
குழையணி திகழ்சோலைக் கூடலை யாற்றூரி
லழகனிவ் வழிபோந்த வதிசய மறியேனே (எ)

மறைமுதல் வானவரும் மாலய னிந்திரனும்
பிறைநுதன் மங்கையொடும் பேய்க்கண முஞ்சூழக்
குறல்படை யதனோடுங் கூடலை யாற்றூரி
லறவனிவ் வழிபோந்த வதிசய மறியேனே. (அ)

வேலையி னஞ்சுண்டு விடையது தானேறிப்
பாலன மென்மொழியால் பாவையோ டும்முடனே
கோலம தருவாகிக் கூடலை யாற்றூரி
லாலனிவ் வழிபோந்த வதிசய மறியேனே. (கூ)

கூடலை யாற்றூரிற் கொடியிடை யவளோடு
மாட லுகந்தானை யதிசய மிதுவென்று
நாடிய வின்றமிழா னுவல வூரன்சொற்
பாடல்கள் பத்தும்வல்லார் தம்வினை பற்றறுமே. (ய)

திருச்சிற்றம்பலம்

---

உ

சிவமயம்

## திருக்கூடலையாற்றூர் திருப்புகழ்.

தாத்ததனத் தாந்ததன தானதன தானதன
தாத்ததனத் தாந்ததன தானதன தானதன
தாத்ததனத் தாந்ததன தானதன தானதன தந்ததான

வாட்டியெனைச் சூழ்ந்தவினை யாசையமு வர்சையனல்
மூட்டியுலைக் காய்ந்தமழு வாமெனவி காசமொடு
மாட்டியனைப்பாய்ந்துகட வோடட மோடாடிவிடு விஞ்சையாலே;

வாய்த்தமலர்ச் சாந்துபுழு கானபனி நீர்களொடு
காற்றுவரத் தாங்குவன மார்பிலணி யாரமொடு
வாய்க்குமெனப் பூண்டழக தாகபவி சோடுமகிழ் வன்புகூறத்;

தீட்டுவிழிக் காந்திமட வார்களுட ஞடிவலே
பூட்டிவிடப் போந்துபிணி யோடுவலி வாதமென
சேர்த்துவிடப் பேர்ந்துவினே மூடியடி யேனுமுன தன்பிலாமல்;
தேட்டமுறத் தேர்ந்துமமர் தாமெனவே யேகிநம
ஞேட்டிவிடக் காய்ந்துவரி வேதனடை யாளமருள்
சீட்டுவரக் காண்டுகளி காலனனுகா நினருளன்புதாராய்
வேட்டுவரைக் காய்ந்துகுற மாதையுற வாடியிருள்
நாட்டவரைச் சேர்ந்தகதிர் வேல்கொடம ராடிசிறை
மீட்டமரர்க் காண்டவனே வாழ்கநிலே யாகவைகும் விஞ்ஞையோனே
வேற்றுருவிற் போந்துமது ராபுரியி லாடிவைகை
யாற்றின்மணற் ருங்குமழு வாளியென தாதைபுர
மேட்டையெரித் தாண்டசிவ லோகன்விடையேறியிட முங்
கோட்டுமுலேத் தாங்குமிழை யானஇடை கோடிமதி ||கொள்ளாயி;
தோற்றமெனப் போந்தஅழ கானசிவ காமிவிறல்
கூற்றுவனேக் காய்ந்தஅபி ராமிமன தாரஅருள் கந்தவேளே;
கூட்டுநதித் தேங்கியவெ ளாறுதர ளாறுதிகழ்
நாட்டிலுரைச்சேர்ந்தமயிலாவளிதெய்வானேயொடு
கூற்றுவிழத் தாண்டியென தாகமதில் வாழ்குமர தம்பிரானே.

திருச்சிற்றம்பலம்.

---

# சிறப்புப் பாயிரங்கள்.

சிதம்பரம் ஜோதி ஆஸ்ரமம்

ஸ்ரீலஸ்ரீ நீலகண்ட சிவம் அவர்கள் இயற்றியது-

தரவுக் கொச்சகக்கலிப்பா.

---

பொன்பூத்த விதழிநதிபுனேசந்தரசேகரனுர்
மின்பூத்த கான்மாறி மேவுறவாடிய வதனுற்
கொன்பூத்த தலங்களினுங் குலவுமதுரைத்தலமே
மன்பூத்த வேற்றமிகமருவுறச்செய்தேயதினும் 1.

சீர்கொண்ட தில்லேமிகச் சிறப்புடையதெனத் தெரிக்க
நேர்கொண்ட வன்பரதநிலவுதிருப்பாவெழுதி
யேர்கொண்ட வதினுமிக வெழிலுறுகூடலே யாற்றூர்ப்
பேர்கொண்ட தலமிகவும் பெருமையுறச் செய்வதற்கே. 2.

குறைவிலா வப்பதிக்குங் கூறுபுராணம் மதிலாக்
குறையொன்றுளது போலக் குலவிடச் செய்தக்குறையை
மறைவுறச் செய்வகையதனுன் மகிழ்கலிய மலையூரிற்
கறைமதியாதியகாந்து கலியுகத்திற் கேற்புடைத்தாய். 3.

சந்தேகி யாவண்ணஞ் சந்திரசேகரப்பெயரால்
வந்தேதம் முற்றறிவு மறைத்தொன்று மறியார்போற்
சந்தமுறு மைவநல்லூர்த் தமிழ்வித்துவானுகுஞ்
சிந்தைமகிழ் மறையவராஞ் சினிவாசையரையே. 4.

கொண்டுதம தாரியராக் குறைவில்கலை கற்பவர்போன்
றண்டியிருந் தரியகலை யனைத்தினையுங் கற்றறிந்து
பண்டுளவக் குறைநீக்கப் பகருங்கூடலை யாற்றூர்த்
தண்டமிழ்நற் புராணமது தாம்பாடித் தாம்பொறித்தார். 5.

பரம்பரனை பாடிடுமப் பரமபுராணத்தினிலே
திரம்பெறவே குறைகாட்டுந் தீருண்டோதி கழுலகி
னிரம்புமதின் வனப்பனைத்து நிகழ்த்தியிடு நிபுணருண்டோ
சிரம்பெறுமந்நூல் கர்த்தா சிறந்தென்றும் வாழியவே. 6.

---

திருப்பாதிரிப்புலியூர் பண்டித
ஸ்ரீமதி அசலாம்பிகையம்மாள் இயற்றியது-

விடையாட்சி கொண்டவரன் கூடலையாற்றூர்ச் சரிதம்
வியன்சிரின்பத்
தொடையாட்சி யருந்தமிழ்க் காப்பியமாகத்தொடுத்திட்டான்
தொழுமூவேந்தர்
படையாட்சிப் பரம்பரையோன் கலியமலை நல்லதம்பிப்
பெயரோன் பண்பார்
நடையாட்சி யுறுமகவா யுதித்தறிவோ டொழுக்கமிவை
நயந்திட்டானே. 1.

செந்தமிழ் தேரைவநல்லூர் திகழ் ஸ்ரீநிவாஸனெனுந்
திருப்பேர்பூண்ட
அந்தணனும் பண்டிதர்பா லருங்கலைதேர் மாணவனு
யமைந்தோன்பன்னூல்
சந்தமுறப் புனைந்தளிக்குஞ் சந்திரசேகரப் புலவன்
றகுசீரோடு
மெந்தவளமும் பெருகிப் பல்லாண்டு பெருவாழ்வி
லிலகமாதோ. 2.

கும்பகோணம். நேடிவ் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்
மா. ஐவநல்லூர்
பிரம்மஸ்ரீ. பி. ஸ்ரீநிவாஸய்யர் அவர்கள்.
இயற்றியது.

ஆசிரியப்பா.

மலர்தலை யுலகிற் குயிரெனச் சிறந்தே
யுலகெலாம் போற்றுமுயர் வின்விளங் குறாஉம்
பெண்ணொருபாகன் பெரும்பதி பலவுள
மெண்ணுறவிளங்கு மின்பதியெது வெனின்
நடுநாடென்ன நவின்றிடு மாயிடைக்
கடுவிசைநீர்மலி கவின்வெள்ளாறொடு
மணிமுத்தாறு மனக் குமிடந்தனி
லணிமிகத் திகழ்வதூஉ மன்றெம்மரனா
வலிந்தாட்கொண்ட வன்றொண்டரைக்கூஉய்
நவிந்திடு வினைதவிர் நற்றமிழ்ப்பதிகம்
பாடுவித்தேற்றருள் பழம்பதி யாயதூஉங்
கூடலையாற்றூரென் னுங் குறிபெறு
நற்பதியென்ப நவிலு மப்பதியி
னற்புதமெல்லா மவனி யோருணர
வடமொழி நூலின் வகுத்தன கொண்டுண்
டிடங்கொள் செந்தமிழி னின்னிசைப்பாக்களால்
கற்றவர் புகழப் பாடினன் மற்றவன்
சிற்றம்பலமாஞ் சிதம்பரப் பதிக்குக்
குடபாலமைந்து கோதறக் குலவிடுங்
கலியமலை யெனு மூரான்மலி சீர்
வன்னி வானவன் வழிவருந்தவத்தா
னன்னய மிக்க நல்லதம்பியின்சேய்
பெரியாரைப் போற்றும் பெருமதி படைத்தோன்
கரிவரதன் றாள் கருதுருகுணத்தா
னன்புமடக்கமு மாற்றவும் பெற்றான்
மன்புகழ் மனைவிமக்களை யுடையான்
சந்த்ர சேகரனெனங் சாற்றுறு பெயரான்
மந்திரந் தேர்ந்து மக்கட் குதவுவோ

னனுதியாந்தமிழை யாதரித் தவனுய்
மனுதிகளாலே வளர்தொண்டு புரிவோ
னின்னபண்பாள னியற்றிய விந்நூல்
தன்னெடு மென்றுந் தாவிலாவிருமைச்
செல்வமும் பெற்றுச் சீர்மிக வாழ்ந்திடும்
நல்வரந் தந்திட நம்பனு மிறைவன்
செழுமல ரடிகளைத் தினமுந்
தொழுதேத்திடுவன் றூய்மையோ டெனவே.

---

கும்பகோணம் டவுன் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்

பிரம்மஸ்ரீ ஊ- ச. வேங்கடராம ஐயர் அவர்கள் இயற்றியது.

பாடறியா ராகியில்லை பரமனென்றே
பகருமவர் தெளிந்துபரம் பொருளைநாடிக்
கூடமுயன் றிடச் செயலேசெய்கை யென்னக்
குறித்துமிகத் துணிந்துபவருங் குலையத்தீமை
யோடவருள் புரியானு ருவகைமிக் கூர்ந்
துறைந்துகதி யளித்துவளர்ந் தோங்குசீர்சால்
கூடலையாற்றூர்ப் பழமைவிரித்து முன்னோர்
கூறுமுத னூறுணர்ந்துட் கொண்டுவந்தே. 1.

வந்தவருக் கினியதமிழ் வளங்களெல்லா
மன்னுறச் செய்தருள் சீனிவாசமேலோன்
றந்தமுறை யாய்ந்துபல நூல்கள் கற்றோன்
றகவுடையோர் சிந்தையினு ளிருக்கத்தக்கோன்
முந்தொருவீரன் மகிழ்ந்து கல்வித்தொட்ட
முலையெனுங் கலியமலைப் பதியில் வந்தோன்
சந்திரசே கரனியற்றித் தந்தானிந்நூல்
தாரணியிற் றாரணிந்து தழைத்துவாழி. 2,

---

வித்யாவிசாரணைத் தலைவராயிருந்தவரும், புதுக்கோட்டை மகாராஜா அவர்கள் ஆசிரியரா யிருந்தவரும், தமிழ்ப் பண்டிதரும், 'பொயட் லாரெட்' (Poet Laureate) என்னும் பட்டம் பெற்றவருமாகிய, பலகலைவித்வான் திருவாளர் R. உலகநாதபிள்ளை அவர்கள் இயற்றியது.

வெண்பா.

கூடலை யாற்றூர்ப் புராணத்தைக் கூறுபுநற்
றூடலையாற்றூர்ப் புக்க தன்மையால்—பீடலையா
ரிந்திர சேகரன்றுளெய்தவரு ளெய்தினன்
சந்திரசேகர மால்தான். 1.

தொல்லரசர் தொல்குடியிற் றோன்றலால் தொல்லுலகில்
நல்லரச நற்றமிழோன் நாட்டினன்—சொல்லரசப்
பேர்ச்சந்த்ர சேகரமால் பெட்புறாஉங் கூடலையாற்
றூர்ப்புராணத்தை யாய்ந்துற்று.

அறுசீர் ஆசிரியவிருத்தம்

ஒருதலத்தின் புராணத்தை யுரைத்தலா லுலகமதி
லோங்கு மேலா
மிருதலத்தின் புராணத்தை யுரைத்தபய னெய்தின
னென்றும் நீங்காக்
கருதலத்தின் புராணத்தைக் கட்டறுத்தான் கூடலை
யாற்றூ ரெனும்பேர்ப்
பெருதலத்தின் புராணத்தை யுரைத்த சந்த்ரசேகரனும்
பேர்மிக்கோனே.

---

புதுக்கோட்டை சமஸ்தானம் மாட்சிமிக்க மகாராஜா அவர்கள்
தமிழாசிரியர் பண்டித
திருவாளர் T. O. நடராஜபிள்ளை அவர்கள் இயற்றியது

---

உலகெலாம் போற்றுமுயர் தனிச் சைவ
மொளிர்தரவுஞற்றிடு முரவோன்
அலகினற் குணங்களமைவுறீ இவாழ்வோ
னம்புவி மகடிருமுகமாம்

நலமலிகலிய மலைவளர் நல்ல
தம்பியினற்ற வத்துதித்தோன்
புலமிகு சந்த்ர சேகரனெனும் பேர்
புனைந்தவன் புகழ்பெறு புனிதன்

திருவளர் மருமத்தொருவனுமயனும்
திருவடி திருமுடி காண்டற்
கருமுரு வுறுதற்பர நிருத்தனவல்
லபனவர் கூடலையாற்றூர்ப்
பெருமிசை தனையா வருமினிதுணர்வான்
பிறங்கற நெறிவிளக்கிடு பூட
மருவுறு தமிழானுறுமழகியாவு
மருவ நன்கியற்றினன் மாதோ.

---

தெற்கு. விருதாங்கன். வித்துவான்

திருவாளர். ந. சுப்பராயப்பிள்ளை அவர்கள் இயற்றியது.

உலகெலாம் பரசுமொருதனிக் கடவுளுஞற்றுதன் னிச்சையின்மல்கி
யிலகுறும்வாசப் புதுநறுவிரியுமெழின்மரை யாசனத்திறைவ
னலகிலாவகையி னளித்தபல்புவனத் தணிகிளர்காவலம்பெயரிற்
பொலிதருபொழிலின் வளமெமாற்புகலுந்தரத்தோ புலவர்க்குமரிதால். 1

அன்னதன்வளமே தென்னிலொன்றறைவ லருமறைதெளிவருமம்மான்
றன்னடிபழிச்சித் தவிர்விலாச்சித்திசார்தர வுயிர்களுறப்பவித்துத்
தன்னுமவ்வீட்டின் றொடர்ச்சிபெற்றுய்தல் சொலப்படு மவனியிலிவனே
யின்னதல்லாத விடமெல்லாம் போகத்தினிதிருந்தருந்தி மீண்டுறலே. 2.

ஆதலிலிறைவன்றனக்கென வகுத்தவவயவ மிலாதுளவினைத்து
மோதுதன்வயமா வியங்கலவ்வினையிர் பிறவினையேற்று தல்வலனுய்
பூதபௌதிகமாய்ப் பொலிவுறுவான்றன் பொன்னடி சார்வுறுவார்தம்
போதமல்கியதெவ்வவ் வுருவாகிப்பொருந்துவ னென்பர்நூற்புலவர். 3.

வணங்குபல்துறையுள் வாசநற்கொன்றை வினைந்தின் மதிநதிருடி
யிணங்குபல் சிரமாமாலைகொண்டெஞ் சுமிறையெனற் கறிகுறியாகிக்
கணங்கொளுமைந்து முகத்தினிலினிது காட்டுமைந்தொழின் முறைநடாத்து
மணங்குடைமுக்கண் வடிவினிற்றிகழுமச் சிவவுருமனத்தமர்த்தி. 4.

நீற்றினாற்பொலியும் புண்டரமிலக நின்மலன்றனைத்தி யானித்துச்
சாற்றுமைந்தெழுத்தாற் சார்குநற்றமக்குச் சார்துணையாகிநற்சைவ
மேற்றபேர்ச்சமயத் தீசனென்றிலங்க விலிங்கநல்லுருவினிலினிது
போற்றுவார்போற்றப் புவியினிற்லவாந் தலங்களிற்பொலிகுவான்புனிதன். 5

அப்பலதலங்கட் கொருதிலகமதா யணிகிளர்ந்தரு நெறிதருதற்
கொப்பலபிறவென்றோ திடக்கங்கையொளிர் கலைமகளிலக்குமியே
திப்பியமாகநதி யுருவாகிச்சேர்ந்து தோய்வார் வினைசிதைத்துமச்
செப்பிடவாலாற் கூடலையாற்றூ ரெனும்பெயர் சிவனுறுமம். 6.

ஒருதலமதுவே யுமையொருபாகத் தொருவனீர்ந்தன் கமலத்து
வருபவன்முதலோர் வழுத்திடப் பஞ்சகிருத்தியமா நடம்பயின்று
பொருவிலா நிருத்தவல்லப னெனப்பேர் புனைந்து கூய்ச்சுந்தரற்பணிகொள்
கருதரு செயல்செய்தலமதன் சிறப்பைக் கழறினன்றமிழ்க்கவியதனில் 7.

எவனெனிலறைவா மியலுமப்பதியி னெழிலுறு வன்னியின்றிக்கிற்
பவனமாயப் பொலியுங் கலியமலைப் பேர்ப்பதியுளான்பதுமைகேள்வன்றன்
கவனவெட்டெழுத்தைக் கருத்தினிலிருத்திக் காசறவிளங்குவானவனுஞ்
சிவனும் வேறென்பார்தமை மதிக்கல்லான் சேரிடமறிந்துசேர் தக்கான். 8.

தாவறுநல்லதம்பி நாமத்தான் றவப்பயனாலடைந் துலகின்
மேவுறுசீர்த் தியைவநல்லூரின் மிளிருமந்தணர் குலதிலகன்
பாவுறு நூல்கள் பள்கிலாதோர்ந்து பயனொடு கெழீஇ வழியொழுகு
மோவறு குணங்கொள் சீநிவாசன்றாளுன்னி நற்பல்கலை யுணர்ந்தான். 9

சாற்றுநட்பென்பதிவ்வியற் றென்னச் சகங்கொள வென்னொடு மருவி
யூற்றமிக்கூர வொளிருவான் பிறர்க்கோரூறு கண்டுழி மனமுருதா
னேற்றமா தவத்தான் சந்திரசேகரனென்றியம்பு நாமத்தினாலிவர்வா
னாற்றல்சால் புகழோ டவனியிலூழி வாழிய வன்னவன் மாதோ. 10

---

சிதம்பரம் அண்ணாமலை சர்வகலாசாலைத் தமிழாசிரியர்
திருவாளர், அமர்கள்.
சு. பொன்னோதுவார் இயற்றிய சிறப்புப்பாயிரம்

கூடலை வாலிக் கலியம லைப்பதி கூறிடமாக்
கூடலை மேவிய சந்திர சேகரன் குணமிக்கான்
கூடலை யான்பதத் தன்பமை நாவலன் கூர்மதியாற்
கூடலை யாற்றூர்ப் புராணமதிந்நாட் கூறினனால்.

சிறப்புப்பாயிரங்கள்

இராமநாதபுரம் சமஸ்தானவித்துவானும், சிதம்பரம், அண்ணாமலை சர்வகலாசாலைத் தமிழாசிரியருமாகிய

திருவாளர் சர்க்கரை இராமசாமிப் புலவர் அவர்கள் இயற்றியது.

---

பரவையிடை யிரவினிடைத் தூதுவிட்டோர் முதுகுன்றப்
பதிக்குச் செல்லுஞ்
சுரம்வினவ வேதியராய்த் தோன்றிநின்று கூடலையாற்
றூர்க்குச் செல்லும்
பெருவழியென் றுரைத்துமுன்செல் பெருமான் செந்தமிழ்ப்பாவிற்
பிரிய னென்றைந்
தருவுலகத் தமுதுகைப்பச் சாலமுள புராணநன்கு
சாற்றி னானால். 1

வண்டிசைக்குத் தேன்பரிசில் வழங்குபொழில் சூழ்கலிய
மலையில் வாழ்வோன்
தெண்டிரைசூழ் மண்டலத்திற் சிறந்ததமிழ் வாணருக்கோர்
திலகம் போல்வான்
எண்டிசையுங் கொண்டாடுங் கூடலையாற்றூரானை
யென்றும் போற்றுங்
கண்டனைய மொழிபுகல்வோன் சந்திரசேகரமதுர
கவிஞ ரேறே. 2.

---



உ

பரமபதிதுணை.

# திருக்கூடலையாற்றூர்ப் புராணம்.

(0)

விநாயகர்துதி.

திங்கண்மா நதிசேர் திருவேணியன்
றங்குகூடலையாற்றின் றகைசொலப்
பொங்குமுக்கட்புகர்முகவைங்கரன்
றுங்கமாமலர்த்தாடலைசூடுவாம்.

## க. பாயிரப்படலம்.

நிருத்தனவல்லபர்.

அருவாகியுருவாகியருவுருவாயைந்தொழிலுமரிதினாற்றி
மருவாகிமருமணந்தமலராகிமன்னியவெப்பொருளுமாகிக்
குருவாகிக்கோணகிக்கூடலையாற்றூ ரதனிற்குனிக்குநாதன்
றிருவாருமலர்க்கழலைச்சிந்தித்துநமதுபவத்திருக்கைவீழ்ப்பாம்.

ஞானபராசத்திகள்.

புலனைந்துமகத்தடக்கிப்புரிகின்றதவமறையோர்புலருமுள்ளத்
தலமைந்துபெறத்தங்குந்தனிவிளக்கையுலகமெலாந்தயங்கவீன்ற
வலமுந்துபுரமெரித்தவள்ளலிடப்பாகத்தில்வயங்கித்தோன்று
நலமந்தமிகந்தருளுஞானபராசத்திகளைநயந்துவாழ்வாம். (உ)

சபாபதி.

மால்தூக்கிற்கிசைமுழவுவலிக்கமரைமலரோனுமகிழ்ந்துபோற்ற
நூல்தூக்குமிருமுனிவர்பணிந்தருளைநுகர்ந்தருகேநோக்கிநிற்கச்
சேல்தூக்குவிழிமாதுபங்கிருந்துசேவிக்கச்செழியமன்றில்
கால்தூக்கிநடம்புரியுங்கண்ணுதலெம்பெருமானைக்கருதிவாழ்வாம்

தக்ஷிணாமூர்த்தி.

இலகுமறைப்பொருடேருமியன்முனிவர்நால்வர்களுமிறைஞ்சியேத்தி
யலகிடுதற்கரியபரம்பொருளானதனைமற்றங்கவர்கடேறிப்

புலமவிரக்கல்லாலின்புடையமர்ந்துதிக்கைசெயும்புனிதமூர்த்தி
நலமவிருந்தாண்மலரைநமதுளத்திலெந்நாளுநலக்கவைப்பாம். (ச)

## அமுதவிநாயகர்.

எல்லாகியானுமென்றியம்புமறையந்தமெனவிறைஞ்சித்தாதை
வில்லாருங்கழல்வலமாய்விரைந்துபுகூஉமாங்கனியைவிரும்பியேற்றுச்
சொல்லாருங்கவுட்கொண்டசுவையமுதகுஞ்சரன்றன்சோதித்தாள்க
ளெல்லாரும்வினைத்தொழுவமகற்றிநமதருநெஞ்சமணிந்துவாழ்க ()

## சுப்பிரமணியர்.

ஓங்குமறைப்பொருடேருயுலகாற்றுந்தொழிலுனக்கிங்கொல்லாதென்னத்
தேங்குலவுமலரோனைச்சிறையிருத்தித்தேவர்கடஞ்சிறையைமீட்ட
பாங்குலவுபச்சைமயின்மீதாரும்பன்னிருதோட்பகவன்செய்ய
வீங்குமரைத்தாளிரண்டும்வியனுளத்திலெந்நாளும்விரிகமாதோ. (கூ)

## இலக்குமி.

சீர்த்துளவமாலைபுனைசெம்மலருமார்பகத்திற்சிவணித்தன்னை
நீர்த்தவழிபாடுபுரிநெறியுடையார்தமக்குற்றநெகிழ்வைப்போக்கி
யார்த்தவருஞ்செல்வமெலாமளித்தம்மைக்கழிபாதவார்வமுத்தி
யோர்த்தருளுமன்னைதனதொளிமலர்த்தாணமதுரத்திலொளிரவைப்பாம்

## கலைமகள்.

அடியாரென்றடைந்தவரையரசருடன்சமனரியாதனத்தில்வைக்குங்
கடியாரும்வெண்சலசக்கலைமகடனிருபாதக்கமலம்போந்தென்
வடிவாருநாவின்மிசைவைகிவளம்பெருக்கிவழூஉக்களைந்துசொல்லால்
கொடியாருங்கூடலையாற்றூர்மகிமையெல்லவையுங்குனிக்குமாதோ. (அ)

## திருநந்திதேவர்.

சிந்தனைக்கெட்டாத்தேவன்றிருவருட்சிறக்கவேண்டி
பந்திகொள்வானநாடர்பணிந்தனர்போற்றிசெய்ய
வந்தனர்தம்மையாண்டுவரன்முறைநிறுத்தவல்ல
நந்தியெம்பெருமான்பாதநறுமலர்கொண்டுவாழ்வாம். (கூ)

## திருஞானசம்பந்தர்.

கடிகமழ்கூந்தற்செவ்வாய்கண்ணுதல்பாகங்கொண்ட
துடியிடைகலசக்கொங்கைசுரந்தநுளமுதமுண்டு
படிதனிற்சைவமோங்கப்பைந்தமிழ்மறையைக்கோத்த
கொடியணிகாழிஞானக்குரிசிலைவணக்கஞ்செய்வாம். (க0)

## திருநாவுக்கரசர்.

அஞ்சிடத்தெவ்வரெல்லாமைந்தெழுத்தடைவிலுன்னி
துஞ்சிடவருத்துநஞ்சைத்தூயநல்லமுதாக்கொண்டும்
வெஞ்சினக்களிற்றைவென்றும்வேலைநீர்படிந்தெழுந்து
முஞ்சவரடிகளன்றியுறுதுணையில்லைவேறே. (௧௧)

## சுந்தரமூர்த்தி.

சென்றநாளடிமையென்னச்செப்புமிவ்வோலையென்றே
மன்றலைமறித்தாட்கொண்டமாதொருபாகன்றன்னைக்
கன்றியபரவைமாட்டுக்காரிருளியாமந்தன்னி
லின்றனித்தூதுசெல்லவேவினனிணைத்தாள்போற்றி. (௧௨)

## மாணிக்கவாசகர்.

போதமாம்புலத்திற்புக்குப்பொய்மலிவாழ்வையெள்ளித்
தீதிலாச்சிவாநுபூதிச்செல்வராய்த்திகழ்ந்துநாளு
மாதரம்பெருகப்பாடியாடிகண்ணருவிமூழ்கும்
வாதவூரடிகளென்னும்வள்ளலருள்வழுத்துவாமே. (௧௩)

## சண்டேசுரரும் மற்றை நாயன்மார்களும்.

தாதைதாளெறிந்துநித்தன்றன்னடிச்சோதிதங்குங்
காதலன்றாளுமற்றைக்கரிசறுமறைநூலெல்லா
மோதிடுமனைபுள்ளும்புறம்புமாயொளிரக்காணுங்
கோதறுதொண்டர்தாளுங்குயிற்றுதுநமதுநெஞ்சின். (௧௪)

## நூல்வந்தவழியும் அது உரைத்தற்குக் காரணமும்.

பண்ணினன்மொழிப்பங்கினனந்திபாலளித்த
வெண்ணினூற்பொருளியற்சனற்குமரனங்கேற்று
அண்ணல்வியாதனுக்கருத்தினனன்னவன்சூதற்
குண்ணலம்பெறவுரைத்தருள்புரிந்தனனுலகில். (௧௫)

செப்புமப்பெருநூல்களிற்சிவரகசியத்துட்
டிப்பியம்மெனத்திகழ்திரிவேணியின்மகிமை
யிப்புவிக்கணேயாவருமெளிதினினுணர
வொப்பறும்வடசொல்லினின்றுயர்தமிழ்ப்பாவால். (௧௬)

தேவபாடையிற்றெளிவுளாருரைவழுவாம
லாவன்மிக்குளேனவர்பதஞ்சிரமிசையேற்று

ஒவிலா துயிர்தொறுமவிரரன்கதையதனற்
ருவிலா துரைத்திடத்தமியேனுளங்கொண்டேன். (கஎ)

அவையடக்கம்.

சாற்றுதொல்வினைச்சழக்கெலாமழித்தருள்புரியு
நீற்றுமேனியனிலவுறுதலத்தினதெழிலை
யேற்றவின்றமிழ்ப்பாவினுவியற்றுவான்புகுமென்
னூற்றலின்னதென்றறிந்திலனூர்வமேயுடையேன். (கஅ)

ஆதலாலளியேனறியாதுரைநூற்க
ணேதமேகலித்தியங்கிடற்கையமேயில்லை
போதமிக்கவர்புகுந்துறுமன்னதைப்போக்கி
யோதுறுங்குணமுளவழியுவந்தெனையாள்க. (கக)

குருவணக்கம்.

புன்புலத்திழியலென்றன்புலத்தினைக்கழுவியன்பாற்
றன்புலமளித்துக்காக்குந்தகவுறுமைவநல்லூர்
மன்புலமவிரவாழுமறையவன்சீநிவாசக்
கோன்புரிதவத்தோனன்றருளைகழல்வாழ்கமாதோ. (உ0)

பாயிரப்படலமுற்றும்.

---

# உ. நைமிசப்படலம்.

வானைமூசிமீப்படர் குவலெனும் வரையுளவாந்
தானவேழவெண்மருப்பொடுதகைதபணிவரன்றித்
தேனையிட்டசந்தகில்பலதிரைக்கரத்தெறியுஞ்
சானவித்தடத்துளதரோநைமிசாரணியம். (க)

நிலத்தின்வாதனைநீற்றிடுநீணெறியுய்க்குந்
தலத்தின்மிக்கதுதவந்தவாத்தவப்பயனளிக்குங்
குலத்தின்மிக்க தோர்குலந்தருங்கோற்றெடிப்பாக
னலத்தினெல்லையினட்டிடுநைமிசக்கானம். (உ)

கலையவாவியகாட்சியர்கரிசறவாற்றுந்
தலையவாவியவேள்வியிற்றனிபுணப்பருகி

நிலையவாவியநெஞ்சுடைவானவர்நிவக்கு
மிலையவாவியவெழிலுடைநைமிசப்புறவம். (ங)

வையமீதுளதாயினும்வானவர்தருவைத்
துய்யவிண்பதந்துகளறுத்தீந்திடனினக்குச்
செய்யவாகுமோசெப்பெனச்சினைகளாங்கரத்தால்
நையவேசுறல்போலுமானைமிசக்காடு. (ச)

உருவிலேலழையரென்னினுமுனுற்றிடுமுதியோர்
திருவில்லைவகியநெஞ்சினரெனுமதைத்தெரிக்குங்
கருவிலார்ந்தனகண்டகக்கனிநனிதாங்கி
யருவவிண்கவித்தார்ந்திடுமவிர்சினைப்பலவே. (ரு)

பஞ்சின்மெல்லடிப்பாவையர்மேனியிற்குழைத்துக்
கஞ்சவார்ங்முகக்கண்களைக்கறுவியேகல்லார்
நெஞ்சிற்காழ்கொடுநிறைமதுத்தண்டுளிநெகிழ்த்தி
மஞ்சுதோய்பொழின்மலிவனவாம்பலமாழை. (சு)

சீப்புவாரளகஞ்செறிசிறுமியர்பருவப்
பூப்புமேவுறப்புரிமுகங்கோட்டினர்புரைய
கூப்புசெந்தலைகுலைதரக்குனிந்தனவாகிக்
காப்புமேவியகாவினுள்ளனபலகதலி. (எ)

சீலமார்தழன்மும்மையுமோம்பிடுசெல்வர்
வாலிதாகவிவ்வனத்தினில்வாழ்ந்திடுவனப்பா
லேலுநங்கனியவற்குறுமினைப்பினையாற்றப்
போலுமாலெனப்பொலிந்திடும்புனைமடற்றெங்கு. (அ)

கற்றமேலவர்கவியுறுகாட்சியிற்கவினி
செற்றநீக்கியசெயலினர்செல்கதிக்குறுதி
முற்றுநல்கியமுறைமையின்முரணினவிலவா
யுற்றதாருவினுயர்வளமுரைப்பதற்குண்டோ. (கூ)

குஞ்சராசனங்கோங்குபுன்காலிகூவிளமே
விஞ்சுசண்பகம்விரைவகுளம்வியனுகங்
கிஞ்சுகங்கிரிமல்லிகைகிளரிதழ்க்கடுக்கை
யுஞ்சிவர்ந்திடுமுயர்மரமேனவுமோங்கும். (கo)

மறைவழுக்கினுமாதிரம்வழுக்கினுமரபாந்
துறைவழுக்கிலாத்துரிசறுமந்தணர்தொழுபாக்
கிறையடுக்கியவிலைகளைக்கதிர்களாலிரவி
நிறைவிலக்கியநீள்வனம்புகுந்திடுநெறியே. (கக)

வேறு.

சீதளச்சென்னியோன்றன்றிருவருள்பெறுவானென்றன்
னாதலம்புகலற்கொவ்வாநைமிசச்சோலைநண்ணி
பூதலம்பொருந்திவாழும்புனிதனைப்புரையுமேலோர்
மாதவம்புகன்றுவாழ்வர்மறையவர்வாய்மைமிக்கார். (கஉ)

இன்பமுமெதிர்வுமூழானியல்வதாற்களித்திரங்கா
தன்பினுக்கவதியின்றியைந்தெழுத்தார்வத்துன்னி
தென்பலித்தலர்ந்தவீக்கடிருவடியிணையிற்சூடி
யென்பதுமுருகப்பாடியேத்துவாரெழிலின்மிக்கார். (கங)

விரதவூண்மேனிஞானவேதியர்விரிஞ்சன்பூத்த
வுரைமலிஞாலமூழிபுலப்பிலகண்டோருய்வான்
சிரதலங்குவித்தகையர்சேகுறச்சிவன்பாற்சிந்தை
புரைதபுத்தெந்தஞான்றும்புணர்ந்தனர்புரிவாரம்ம. (கச)

அரிசிவபேதங்கற்பித்தவரவர்மனக்குவந்த
திரிபுரைகூறிவேதத்திருநெறிதிறம்புநீரர்
பரிபவக்கோட்டிவெள்கிப்பணிமுடிப்பரனைப்போற்றி
யரிமலர்க்கழலையேத்தியஞ்சலித்துறைவாராங்கண். (கரு)

அத்திரிததிசிகண்ணுவன்சதானந்தன்காமச்
சத்துருவாம்பிருங்கிசகம்புகழ்மார்க்கண்டேய
னுத்தமப்பிருகுபோதாயனனுயராபத்தம்பன்
சத்தியன்புலத்தியன்குச்சகன்சம்புசனற்குமாரன். (கசு)

காசிபன்பரத்துவாசன்கலைச்சிருங்கன்சாண்டில்ய
னசுவலாயனன்சாபாலிநாரதன்றுலப்பயன்
கூசுமாண்டன்மாதேவன்குசுருபார்க்கவன்சனந்தன்
பேசகமருடணன்சிர்ப்பிரசண்டன்பெருஞ்சனதன். (கஎ)

அரிதகன்கிருதன்கண்டுவேட்டவக்கிரன்வசிட்டன்
றெரிபிரசண்டன்றத்தாத்திரேயன்காலவன்பெருஞ்சீ

ருரியவங்கிரசுசாதாதபன்சுனச்சேபனுண்மை
புரிதவுமியன்சுமந்துபுலகனேகபிலன்கற்கி. (௧௮)

இனையபன்முனிவராங்கோரியலிடங்குறித்துக்கூடித்
துனிமலிபிறவியாயதொடுகடற்பரப்பைத்தூர்ப்பான்
பனிமலையிமயமீன்றபாவையோர்பாகனீலத்
தனிமலையனையகோமான்றண்ணளிபெறுவதெங்ஙன். (௧௯)

விரதமோகொடையோமெய்யோவீங்குமெய்ஞ்ஞானபோதச்
சரதமோதேறகில்லோஞ்சத்தியவதிமுன்னீன்ற
வரதனும்வியாசவள்ளல்வண்பதமுளரிபோற்றிச்
சுருதிநூறெளிந்தசூதன்சொற்றுறைசூழ்தனன்றே. (௨௦)

என்றனருன்னவாங்கணிருந்தவச்சூதன்றுன்னி
நன்றெமைவிழைந்திருற்றநயப்பெவனவிறிரென்ன
பொன்றவிறவத்தண்ணுனின்பொற்பதம்புரிந்தோமைய
வின்றெமையளிக்கவேண்டியெம்முழையெளிதுற்றீரே. (௨௧)

இருந்தவமுதியோயிங்ஙனெம்பவநோய்கள்வீயத்
திருந்துநுஞ்செய்யபாதத்திருமலரிணைதந்தெய்த்தீர்
வருந்தலின்றுமாயவாழ்வெனுமளக்கர்சிந்திப்
பொருந்தியதவச்சீரெல்லாம்புணர்த்தெமைக்கோடியைய. (௨௨)

என்றனருழைவந்தெய்துமிருந்தவர்க்கெண்ணிலாத
நன்றிகள்பலவுமாய்ந்துநறுமலராதிகொண்டு
வொன்றியவிதிவழாமலுஞற்றுபூசனைகளாற்றி
கன்றியமனத்தரானோர்கழறுவார்கவிழ்ந்துநின்றே. (௨௩)

கொங்குபிர்த்தளிகடுஞ்சுங்குழலவட்கொருமாணுகம்
பங்குதந்தருள்செய்நாதன்பதமலர்பரவும்பான்மை
யங்கணவறங்களாதியறிந்தருளமலநின்போ
லிங்குணரியம்பவல்லாரிறையருணூல்களோர்ந்தாய். (௨௪)

அமைவிலம்பந்தவாய்ப்பட்டாற்றலமளியமுத்தி
சமைவிலம்வறிதேகாலஞ்சரித்தனஞ்சாமியெங்க
டமைநனிகருணைகூர்ந்துதற்பரன்ருளிற்றுன்னுங்
கமைபுறுமுபாயமொன்றைக்கட்டுரைத்தருள்கவென்றார். (௨௫)

அடுவினைப்பிறவிதேய்க்குமமுதகுஞ்சரனையஞ்சுங்
கடுநுழைகளத்தினானைகனமிகழ்குழலினாளை
தொடுகழல்சேயைமுன்னித்தூயமாமறைமுன்கோத்த
வடுவகன்ஞானபோதவள்ளலைவழுத்திச்சூதன். (௨௬)

ஐந்தவித்தாற்றல்சான்றீரறைகுவல்கேண்மினீவிர்
பந்தமதறுத்துவீடுபெற்றுதற்குரித்தாஞ்செய்கை
யந்திசெய்மேனியண்ணலமர்ந்தருள்புரியுமூன்று
பந்திசெய்சிறப்புமுற்றபண்புடைத்தானங்கேட்டல். (௨௭)

அன்னதுசிந்தைசெய்தலன்புடன்பிறர்க்குரைத்தல்
பன்னுமத்தானத்தெய்திப்பரிவுடன்றீர்த்தமாடல்
துன்னளிதுதைபுங்கொன்றையாதியமலர்கடுவி
முன்னியமுதல்வற்போற்றல்முனிவிர்காண்முறைமைத்தென்ன.

உற்றதுகொண்டுமேல்வந்துறுவனவுணரும்பெற்றி
நற்றவநின்மாட்டெய்திநவையெலாநலியப்பெற்றே
மிற்றதெம்பிறவியையவெமதுவிண்ணப்பமொன்றுன்
மற்றதுதெரித்துமின்னேமகிழ்ந்துகேட்டருடிமாதோ. (௨௯)

தக்கிணக்கயிலையென்னுந்தலப்பெருமகிமையோடு
தொக்கமூவேணிதீர்த்தத்தொல்புகழ்ச்சரிதமுன்னாண்
மக்கனமிலாதுகேட்டோமற்றுமோர்தடவையெங்கட்
கிக்கணமருள்கவந்தவெழிற்றிரிவேணிகாதை. (௩0)

என்றலுமுனிவர்கோமானின்னகைபுரிந்துளத்திற்
பின்றலிற்களிப்புத்தூண்டபிறைமுடிப்பெருமான்வைகுந்
தன்றனித்தலங்கடன்னுட்டக்கிணப்ரயாகையென்னும்
பொன்றலிறலமாண்பெல்லாம்புணர்த்தலென்புலமைக்காமோ. (

கொடியணிநெடுமாடஞ்சேர்கூடலையாற்றூரென்றால்
படிதனிற்பாதகங்கள்பற்பலகோடியேனு
மிடிபொருமாவிற்சோம்பியிரிந்திடுமிதையஞ்சோர்ந்து
கொடிதனிற்கண்டராம்மநோய்துகொலதன்சீர்செப்பல். (௩௨)

என்னுமுன்னெனக்கானந்தமிவர்கின்றதென்னசொல்வேன்
நன்னுநங்கட்குண்டாதனவிலவும்வேண்டாநஞ்ச
மன்னியகண்டத்தெந்தைமகிழுகூடலையாற்றூராம்
விண்ணியன்மாடமூதூர்வினவலிற்றவம்வேறென்னே. (௩௩)

நிலஞ்செய்ததவமென்றேத்துநீடலைகூடுமாற்றார்த்
தலஞ்செய்ததவத்தாலன்றித்தரிசித்தலெவர்க்குமாகா
வலஞ்செய்தசேடற்கேனும்வழுத்துமாமலரோற்கேனும்
புலஞ்செய்துமொழிதற்குண்டோபுன்மையேன்புகல்வதெங்ஙன். (நச)

ஆக்கமுமழிவுநீவிராணையிற்கிளந்தசொல்லே
ஊக்கிடுமுயர்விற்றுகவுணர்த்துவான்வினவலுற்றீர்
பாக்கியமிதனின்மிக்கபலித்திடல்வேறுமுண்டோ
நோக்கியதவத்தீர்கேண்மினுவலுவலெனவுட்கொண்டான். (நரு)

நைமிசப்படலமுற்றும்.
ஆகப்படலம் உக்குத் திருவிருத்தம் ருரு.

## ந. தலமகிமைப்படலம்.

மும்மையெனுங்குணங்கடந்தான்முன்னெடுபின்னில்லாதான்மூவாஞான
தம்மைநிகர்தனிப்பாமன்றண்ணருளாற்றம்மடியார்தங்கட்குற்ற [றுங்
வெம்மையெலாம்போக்கியருள்வித்தகனும்விண்ணோர்கள்விரைந்துபோற்
கொம்மைவருமுலைப்பாகன்குனித்தருளும்பதியினியல்கூறக்கேண்மோ. ()

கொத்தானமூர்த்திகளின்வடிவாகிக்குவலயங்கட்கெல்லாமேலாஞ்
சத்தானதலங்களிலேசத்தானதலமிதுவென்றெவருஞ்சாற்று
முத்தானமணிநதியும்வெண்ணதிசேர்பாரதியுமுடுகிக்கூடு
மத்தானப்பெருமையெவனறைவதுநந்தாபமெலாமலக்கண்செய்யும். (உ)

இயங்குமுடம்பாதியுடம்பெட்டுணையுநில்லாமலிணைத்தகொன்றை
தயங்குமுடிப்பானடியாந்தடவிதழ்த்தாமரைக்கணுறுந்தகைமைதந்து
வயங்குபலபோகமெலாம்வகைவகையுண்பித்துவழிவழியாச்செய்த
வுயங்குவினையாதியவங்கொருகணத்திலுகைத்திடுமாலுணர்வின்மிக்கீர். ()

எய்ப்பிடத்திலெண்ணுங்காலிரவியெதிர்பனிபோலாமிணங்குபந்தக்
கைப்பிடமாங்கடவிடத்துவங்கமெனக்கரையேற்றிக்கலங்கலூழ்த்து
வைப்பிடத்திற்செயுமறங்களத்தனையுமோரிமைப்பில்வழங்கிவண்மைக்
குப்பிடமாமான்கயிலைக்குறுநெறிதந்துய்விக்குமோங்கலன்னீர். (ச)

கருச்சிதறுமப்பதிக்கட்கல்லாகிப்புல்லாகிக்கணக்கில்பேத
திருச்சிதறும்பிறவிகளிலெவையுறினுமாங்கவைதாந்திரிபொன்றின்றி

வரிச்சிறகர் துவன்றிநறவழிந்தொழுகக்குடைந்தாடுமறுகுவேணி
யுருச்சிகாத்தலைமணந்தவும்பர்பிரான்கழலிணைக்கணுறுவதுண்மை. (௫)

இட்டிபதினாயிரமற்றியற்றினும்பல்லெழிலறங்களிறும்பூதெய்த
வுட்டிரியாதனாற்றினுமிப்பூதலத்தினாதலங்கொண்டுணர்த்தலாகா
மட்டிரியும்புனற்கோதைமடந்தையொருபாகத்தின்மணந்தவெந்தை
சிட்டர்விரையப்பதியைத்தரிசிக்கவுறுஞ்சிறப்பிற்சிறவாதம்ம. (௬)

பண்ணாடுவரிச்சுரும்பர்களியயரும்பதுமமிசைப்பரிந்துவைகுங்
கண்ணாடுகுழலுடையகலைமகளுநிலமளந்தகரியோன்மார்பத்
தென்னாளுமருண்மல்கியினிதுறையுமிந்திரையுமிறைஞ்சிப்போற்ற
மண்ணாடுவருபுனலாய்க்கங்கையொடுமத்தலத்தின்மணப்பதென்றால். (௭)

சத்தியமாமுரையன்றிச்சடங்கொடுக்குமுரைகடிந்தசால்பின்மிக்க
வுத்தமநாவுடையரெவரானாலுமதன்மகிமையோதற்கில்லை
நத்தியன்றுமணிகொழிக்குமக்குடிலைத்தனினைநலக்கச்செய்தான்
முத்தியுறுமூவேழுதலைமுறையுஞ்செய்பவங்கண்முளியுமன்றே. (௮)

தரைப்புவியிற்செவிடூமைகுருடுமுடமாதியவித்தகையினோர்க
ளுரைப்புதியநீத்தமுறத்தோயிலவர்நொய்யவினையெல்லாநூறித்
திரைப்பரவைநுகத்திலொருதிரைப்பரவைகழிநுழைந்ததிறத்தைமானு
முரைப்பரியமானிடமுற்றும்பர்பிரானடியரெனவுய்வரன்றே. (௯)

உயிர்பிரித்தூணருந்தியுகுமுடல்பெருக்கியுவகையுறுமுய்விலோர்கள்
வயிறதுக்கப்பிறர்பொருளைநெஞ்சமுறவஞ்சித்தோர்வறியரானோர்
பயிரழித்தோர்பரனடியார்பசித்திருக்கப்பார்த்திருந்தபதகர்வீழுஞ்
செயிரழிக்குஞ்சிந்தைசெயிற்சேகுறவர்சிவகதிக்கேசேர்வராங்கே. (௧௦)

மனைவியுயிர்வீயமகன்மனைவிகையாலொருபொழுதூண்மடுத்தவாய்வில்
வினையர்வழியுறுநிரயம்வீழாமல்விரைந்தவரைவிடுவித்தெய்யா [மைக்
கினைவினெறியகைத்தயலோர்நிந்தைசொல்லப்பிறனில்விழைநீசர்தம்
கனையெரியிலாழாமற்காத்திடுமாலதன்பெருமைகணிப்பதேயோ. (௧௧)

நலந்தீதென்றெண்ணாமனுநிலத்திலறம்வளர்த்தநல்லோர்நாணக்
குலந்தீமையுறப்பொருந்துமெக்குலமுமெனக்குறித்தகொடியரேனும்
அலந்திரவப்பதிக்கணுறுகாதியருமலர்கொண்டானைப்போற்றிச்
சலந்திரம்படிந்தொருகால்சாத்திமுறைதொழவவர்தஞ்சழக்குநீங்கும் (௧௨)

அழுவாயர்நெறிபுகுந்தெம்முறையிதுவாலெனவுரைத்துமார்த்துப்பொங்
[கித்
தொழுவாய்மைகெடநோக்கந்தொட்டபடிவழக்கழித்துத்துவ்வையார்ந்த
கழுவாதவினைபயின்றகடையருக்குங்கதியூட்டுங்கழுவாயான
மழுவாளியுமையோடுமகிழ்ந்தருளுமப்பதிபோன்மண்ணிலுண்டோ. (கங)

இனியாருமில்லையெமைப்புரப்பதற்சென்றழிந்திரங்குமேல்வைநீவிர்
கனியாதிரெனக்களைகணுகுவலென்றேற்றுரைக்கனவிலேனு
நினையாதுமறந்தவர்க்குய்வில்லையெனநிகழ்த்தினுநானிறைநீர்தங்கு
மனையாகுசெஞ்சடிலத்தண்ணல்வளம்பதியாங்கண்மருவிலுய்வார். (கச)

பெரியார்சொற்பேணுமற்பிழைத்துநெடுஞ்சுடுமொழியாற்பேதுகண்டு
மரியாதையெனும்வளங்கொன்றுருதமயல்விளைந்தமதியிலாத
எரியாழுமிழுதைகளுமெல்லெழுந்தாலெனமனத்தினேதநீங்கிப்
பெரியார்க்கும்பெரியாராய்ப்பிறங்குவராலப்பதியைப்பேணின்மாதோ (கரு)

சந்தமறையந்தணர்கள்சலிக்கவருந்தானமெலாஞ்சாயாதீந்து
பந்திமுறைப்போசனமுஞ்சுவையாரப்பண்ணுவித்தப்பதியின்மாடே
கந்தமுதலாகியபாகடையளித்தோர்காலமெலாங்கயிலைநண்ணி
யிந்துமுறிச்சடையிறைவனிருசரணந்தலைகமழவினிதுவாழ்வார். (கசு)

இவையாகும்பிரமஹத்தியென்வறநூலியம்பியவையெல்லாஞ்செய்தோர்
கவையாகுமனத்தொடுபொய்ச்சான்றறிந்தோமெனக்கழறுங்கடையரா
நவையாதியாங்காமநலிவுறக்கானடையேபோணுமின்றி [னோர்
யெவையானுமென்புணர்தலின்பமெனமுறைவிலக்கியிணங்கினோர்கள். ()

பாலெனயொடுதேன்பளிதம்பாகிரும்புபழம்பட்டும்பவளமாதி
யூனமறம்பகமணியோடுயர்வலவாயங்கலவையொளிர்வான்முத்தே
யீனமுறக்கவர்கள்வரித்துனைபேரும்மிருந்தாங்கிறைவற்போற்றித்
தானமுறப்பெய்யிலறந்தழைத்திடுமாலாரிருளுந்தகருமாலோ. (கஅ)

கணியொற்றிநூலறிவார்கட்டுரைக்குங்கரியென்னக்கரிசுபோக்கும்
பணிபற்றுமதியிரவிபாவுறுநாட்பனகமணிப்பாவைபங்கன்
றிணிவுற்றபதமலரைத்திரைகூடுமப்பதியிற்றிகழவைகிப்
பணிமுற்றப்புரிந்திடிலேழ்பவஞ்சுமந்தபாவமெலாம்பாறுமன்றே. (ககூ)

அகாமுதலக்காமூன்றருள்வடிவாம்பிரணவமாயமைந்தவாபோற்
சிகாமுறுமத்தலத்திற்றிரிவேணிசெறியுமிடஞ்சென்றுதோய்ந்து
மகாமுறுமாதமெலாமலங்கடிந்துசிவபூசைமகிழ்ந்துசெய்யிற்
பகாமுளையாரவரேபதியுருவிற்பதிந்திலங்கிப்பரமாய்க்காண்பர். (உ௦)

தேமருவுசோலைவளர்திரிவேணிசங்கமத்திற்றெரியக்கொண்டாங்
கேமெவலும்பிடவதுதானிருங்கயையினுறும்பயன்மற்றெய்திற்றாகிப்
பேமகலப்பிணிகடை இப்பிஞ்ஞகன்றாள்பெறுவரெனப்பேணிச்செப்பு
நாமவறிவுடையோர்நன்னூல்பலவாமெனநாடிநவில்வர்மாதோ. (உ௧)

திருவக்கம்புனைந்துதிரிவேணிபடிந்தெழுந்தான்றன்றிருநீறேந்தி
மருவக்கம்புயமாதியங்கமெலாம்புண்டரமாமலியப்பூசி
யொருமுக்கால்வலம்புரியினோவாமற்கயிலையின்கணும்பரேத்த
வருமுக்கணிறையருளவாழ்ந்திருப்பாரவர்பெருமைவழுத்தப்போமோ. ()

வேறு.

எள்ளுநீருமிறைப்பதற்கெச்சமென்
றுள்ளுவார்க்குறுகண்டுடைத்தேயளித்
தள்ளல்செல்வமுமாரவளித்தரும்
வள்ளலாக்குமிவ்வையமிசையரோ. (உ௩)

மறையைவிற்றவர்மாதரைக்கொன்றவர்
குறையவேதியர்கூற்றையிகழ்ந்தவ
ரிறையையெள்ளிநரெவ்வமுழந்தவர்
நிறையவைவகினெறிபுகுவாரரோ. (உ௪)

பிதிருக்கடன்பேணிப்புரிகிலா
ரதிரவந்தவர்க்கஞ்சலளித்திடார்
முதிரமூத்தவரைமுனிந்தேசினோ
ருதிரபானமொழிகுவருன்னினே. (உ௫)

பிச்சையென்றபினைங்கியநெஞ்சினர்க்
கச்சமேறியழுங்கிடவார்த்திடுந்
துச்சநீரருந்தோன்றிடினவ்வழி
நச்சுவாய்நரகம்புகார்நாடினே. (உ௬)

தாரமாதர்தந்தோள்குயந்தொட்டவர்ச்
சேருநீசச்சிதடர்செருவிலே
பூரவிட்டுப்பிரிந்தவர்புந்தியா
லாருங்கும்பியளவதாங்கில்லையே. (உ௭)

கலையவிழ்ந்துகவிழ்ந்துமண்ணோக்கிய
மலையிகழ்ந்திடுமாமுலைமங்கையர்
நிலையழிந்திடநின்றுகண்ணோக்கினோர்
தலையழிந்திடுபாவந்தகருமே. (உஅ)

ஐயவென்னுமசட்டுவலியடர்
வெய்யகாசம்விழிப்படையேவெகுண்
டெய்யுஞ்சூலையெரியிழிநீரெலாம்
பையவேகும்பணிந்தருகெய்தவே. (உகூ)

தொட்டுவுன்மிகத்துய்த்தவர்தொல்லறம்
விட்டழித்தனர்வேண்டித்தமக்கென
முட்டவாழுமுடையருமுன்னிலாங்
கிட்டமானவெலாமெய்துவாரரோ. (௩0)

ஈன்றவர்பசியாலிழிபெய்துற
வேன்றுதம்பசிக்கேறவருந்தினோர்
கான்றவாயிற்கனன்மழுவுய்த்திடார்
நோன்றவாங்கணுழையப்புகினரோ. (௩க)

ஆக்கந்துன்னியழியுமென்றோர்கிலார்
தேக்குநல்லறந்தேறவறிகிலார்
நோக்குசிந்தையாளெய்தவணோர்தரம்
வாக்கவாழ்வரால்வண்பதமாமரோ. (௩உ)

ஞானமுன்னியுநான்மறையுன்னியும்
போனகல்விப்புரைதபவுன்னியு
மானமுன்னியுமாதரையுன்னியும்
வானநாடரும்வந்திழிவாரவண். (௩௩)

சிறியரென்றுரைசீரியவல்லன
வெறியுறச்சொனும்வெய்யவர்வாய்வழி
நறியவல்லனநாணிடப்பெய்வதாங்
கறியினவ்வுழையண்மிடினில்லையே. (௩ச)

காலைமாலைகதிரவற்போற்றியே
சீலமுன்னியசெய்தறியார்பிழை

யோலமென்றாஞ்சிந்திமற்றேய்ந்திடு
ஞாலமுய்யுமன்னற்பதிநண்ணவே. (கரு)

வெய்யவெய்யனவிட்டிடும்வேண்டிய
செய்தசெய்தவஞ்சித்திக்குஞ்செம்மையாம்
பெய்தபெய்தவறம்பிழையாதுறி
னுய்யவுய்வனவுண்பிக்குமுண்மையே. (கசு)

மதுவைவுண்டுமயங்கிமயங்கிதீ
தெதுவையும்புரியினர்கள்வாய்வழி
புதுவைகாய்ச்சிப்புகுத்திடுபுன்கணுஞ்
செதுவிவீழ்த்திடுஞ்சேணுறுமப்பதி. (கஎ)

வேதமோதியவேதியாத்துறைச்
சிதநீர்படிந்திட்டான்செய்யதா
ளோதில்வின்னுறையொண்டொடிமாதர்தோள்
காதனீங்கக்கலப்பர்கள்காண்மினே. (கஅ)

இன்னதன்மையவித்தலமாண்பெலாம்
பன்னலாவதிலைபணிகாசியிற்
சொன்னவாய்மைச்சுகனுக்கன்றோதிய
வென்னையாட்கொளிருந்தவன்சொற்படி. (கசு)

ஓதுவல்லின்னுமுங்களுரங்கொளப்
பேதியாதுபிறங்கிடப்பெய்ஸிரா
லாதிநாயகற்கஞ்சலிதூக்கிய
வோதியாளுமுயர்தவத்தொள்ளியீர். (உ0)

தலமகிமைப்படலமுற்றும்.

ஆகப்படலம் ங-க்குத்திருவிருத்தம் கூடு.

---

# ச. அரியயன் அடிமுடிதேடு படலம்.

சீர்த்தியத்தலச்சிறப்பினையுரைத்தனஞ்சிலவே
யார்த்தான்றனியடியொடுமுடியினைத்தேடி
வேர்த்தயன்றுமாய்விண்ணவன்வெள்கியகாதை
யோர்த்துளங்கொளவுரைக்குதுமுவப்பொடுகேண்மின். (க)

முன்னுவானவர்சித்தர்சாரணர்முனிவோர்க
டுன்னியெங்கணுமுறைமுறையோதிடுந்துழனி
யின்னும்வெம்பவமிலையிலையிவணுறுமியலார்க்
கென்னும்பான்மையினிலகுறுங்காசியம்பதியே. (௨)

காணியாக்குவல்கலையைக்கதிவிழைந்தோர்க்குத்
தோணியாகுவல்பவக்கடல்கடந்திடத்துணிபே
பேணினார்க்கிருமையும்பலபிறங்கிடுபோக
மூணியாக்குவலென்பதுமொத்ததவ்வோசை. (௩)

மணியழுத்தியமாடங்கணிறைவனமஞ்சா
ரணிகொளுத்தியவம்பரமூடுபோம்புரிசை
பிணிமுருக்கியபிஞ்ஞகனுருவெனப்பிறங்கிக்
கணிவகுத்திடற்கரியதாய்க்கவினுறுங்காசி. (௪)

கங்கையென்றுலகேத்தியகடவுண்மாநதியாங்
கெங்குதொல்பவமெங்கெனநனியிரைத்திட்டுப்
பொங்குபாதலம்போழுறப்புணரியைத்தொட்டே
யெங்குந்தேடியவருவதையேய்ந்திடுமினிதே. (௫)

எள்ளுங்கொள்ளிடமின்றெனவெவ்வணுறினுந்
தெள்ளுநம்வினைத்தொழுவினையகழ்ந்திடுந்திறத்த
வள்ளுமண்ணலாமிலிங்கமாய்க்காண்குறுமென்றால்
விள்ளுங்காசிபோல்வீறுடைத்தனித்தலமுண்டோ. (௬)

இன்னதன்மையவெனவெடுத்துரைப்பதற்கரிய
வன்னகாசியினனகனுயாருயிர்தோறும்
பின்னமின்றியேபில்கிடுமெள்ளினெய்போல
வுன்னுமப்பரம்பொருளினைவேறெனவுணரான். (௭)

அகத்தினைந்தெழுத்தறலிடையருவிபோலொழுக்கிச்
சுகத்தியானமாய்விளங்குறுஞ்சுகனெனும்பெரிய
மகத்தியானமாய்மன்னியமறைமுதல்வகுத்தோன்
சகத்திறைஞ்சிடவெழுந்தவண்சார்ந்தனன்சரித்தே. (௮)

மருளைநீக்கியமாதவர்மாணவரோடுந்
தெருளைமுன்னியதிகழ்ந்தனர்யாவருந்திகழ
வருளைமுன்னியவம்பகச்சுகனதுதெரியா
விருளைநீக்கியவிரவியிடுனைமுந்தனனிறைஞ்ச. (கூ)

கன்றைநோக்கியகறவையிற்கசிந்துளங்கதுவ
வொன்றவுச்சிமோந்துமுறக்குராங்கினிலூன்றி
யென்றுங்காண்குறுவின்புறுபுணரியினிழிந்து
நன்றுகாணுனைப்பெற்றதின்பயனெனநயந்தான். (கய)

விதுபுணர்த்தியவிரிசடைக்கடவுளைவிழைந்து
தொதுமலற்றிடநோற்றிடுமுனிவரர்நோக்கி
யிதுபெறும்படியிருந்தமிதத்தவமெனவறியோந்
துதியருந்தவமென்றனர்துளங்கியங்கமர்ந்தார். (கக)

மைந்தவென்றுதம்மைந்தனைமகிழ்வெலாம்வினவி
யெந்தையியாதனுங்கிருந்துறுமேல்வையேனையரை
யைந்தவித்தருள்கடித்திடவருட்கதிர்விரியும்
புந்திபுற்றநும்புணர்ப்பினிதாகுகவென்று. (கஉ)

அழலையோம்புதலருமறையோதுதன்முதல
வழுவகில்விரோவண்டவமுஞற்றிவாழுகிரோ
நழுவவின்றியேநன்றெனக்குரைத்திராலெனலுந்
தொழுதசிந்தையர்துன்னினவுரைத்திடத்துணிந்தார். ()

வேறு.

அன்புகொண்டெமைப்புரக்குமறவனேயமலஞான
முன்புடைமுதல்வபோற்றிமுழுத்தவமுடைமையாற்று
மின்புறுசேயினேடேயிகமுறத்தமையுங்கண்டு
துன்பெலாமகலப்பெற்றோந்துருவின்மற்றிதனினுண்டோ. (கச)

இவ்வண்ணமுனிவர்போற்றவிருவினையொப்புவாய்ந்த
செவ்வண்ணச்சுகனுமன்னர்செம்மனச்செறிவையோர்ந்து
மைவண்ணமகற்றுமெந்தாய்மலியுமிப்பிறப்பைவீழ்க்கு
மெய்வண்ணப்பரத்தைக்காணுமேன்மையைப்புகறிமாதோ. ()

வேறு.

இலையறிவனவெனவியம்புமியாவையுந்
தொலைவிலவறிந்திடுதூயமைந்தநீ
நலையெமைவிழைந்ததுநவிலுகிற்பல்யான்
மலைவிலைகேட்டியான்மகிழ்வுதுன்னவே. (கசு)

ஒன்றறிஞானிகளுளச்சரோருக
மன்றினிலார்ந்ததுமதிக்குமேலதா
மின்றனிப்பொருளினையெவர்க்குமிற்றென
லொன்றியதிலையதையுணர்த்தலெங்ஙனம். (கஎ)

உயிர்தொறுமுலப்பிலவுணர்வின்மேலது
செயிரறுபரம்பொருள்செறிந்துவேறுரு
வயிரறுபான்மையரறியுநீரது
வெயரினோர்க்கரியதுவிள்ளப்புக்கினே. (கஅ)

சத்தையுமசத்தையும்பிரிக்கவல்லது
மெய்த்திடுதத்துவமேன்மையெண்ணில
சத்தெனச்சித்தெனச்சலிப்பிலானந்த
வத்துவிதம்மதோவழிவதில்லையே. (ககூ)

கயிற்றரவெனவகல்கானனீரென
மயற்படநாசமாய்மலினமின்றியே
வெயிற்படுமுலகமாய்விரிந்தவற்றுளே
வயிற்படவொடுங்கிடும்வண்மைத்தப்பொருள். (உ0)

எக்குணங்குறிகளுமின்றியெங்குமா
மக்குணந்தன்னிடையலங்குமாயையாந்
தொக்கினடோன்றிடுந்துலங்குபூதமும்
விக்கினாவிக்கினமாய்விளங்கிடும். (உக)

அப்பரம்பொருளயனரியொடாதியாந்
துப்புடையமராராய்த்துலங்கத்தொண்டர்கள்
விப்பிதவுளமலர்விரியவேய்ந்தனர்
செப்புவர்தோத்திரஞ்சிவணத்தாமரோ. (உஉ)

ஆக்கலேயாதியவகலகில்லதாய்த்
தூக்கினனிறுவியதுளக்கமில்லதாய்ப்
போக்கலும்புணர்த்தலுமின்றிப்புஞ்சமாய்
வாக்கினன்மனத்தினன்வடிப்பதில்லதாய். (உ௩)

ஐங்கலாவடிவமாயவைக்கப்பாலதா
யெங்குமாயிலங்கிடுமேதமில்லதாய்த்
தங்குறுமங்கதுதாக்கலற்றதாய்ச்
சங்கையின்ஞானமாய்ச்சாந்தமாயது. (உ௪)

தத்பதக்குறியதாய்த்தாணுவாய்ப்பிற
நற்பதமெவையுமாய்நாதவிந்துவா
யுற்பலவுருவமையோங்கலாய்வளர்
சிற்பரமாமதைச்சிவமென்றேத்துவார். (உ௫)

அத்தனையறிந்தவரகற்றும்பாவமாம்
வித்தினைவிட்டினர்விம்மிதத்தராய்ப்
புத்தியிற்பேதமாம்புலம்பல்போக்கியே
முத்தியின்மூலமாய்முன்னநிற்பரால். (உ௬)

அன்னரேயந்தணரதனையுற்றிடும்
பின்னமிலருநெறிபேணுகிற்கில்யாந்
துன்னியவாதரத்தொடுந்துலக்குவல்
நன்னரினறிந்துளநலக்கவேண்டுமால். (உ௭)

போற்றியகுருவருள்பொங்கப்போற்றியே
போற்றியமறைப்புலம்புணர்ந்துபோற்றியே
போற்றியசித்தமும்பொலியப்போற்றியே
போற்றியகுருவுபதேசம்போற்றியே. (உ௮)

அவ்வழிஞானமேயடைந்துமோக்கமாந்
துவ்வழியடைவாத்தோற்றமில்லவர்
செவ்வழியடைவதாந்திறமுஞ்செப்புவல்
மெய்வழியுற்றநீர்மேவிக்கேண்மினே. (உ௯)

விதியுளிவிக்கிரகங்கள்வெஃகியே
துதிபுறல்பூசைகடுலங்கவாற்றுதல்
கதுவியவன்பிறற்கண்ணுதற்பர
னெதுமறீர்தலங்களினுகால்வைகியே. (ҧ0)

அளந்திடற்கரியநல்லறத்தினங்கமாங்
குளந்தொடலாதியகுயிற்றியந்தணர்க்
குளந்தொடக்கருணையொடுவப்பினூட்டுவித்
திளஞ்சொலாலன்னரையிறைஞ்சியேத்துதல். (ҧக)

இன்னபன்னற்செயலிவறலின்றியே
பன்னுறச்செயினதுபலித்துப்பைப்பய
முன்னுறுஞானமுமுளைத்துமுத்தியுங்
கொன்னுறப்பெறுவரால்குணிக்கினன்னரே. (ҧஉ)

வேறு.

மெய்யமைவேதங்கூறியதிவையாமேதினியதிற்பலகோடி
நொய்யவெம்பிறவிநுழையினுமிலையாநுவலருஞ்சிறப்பினையுறுதல்
கைதவநீரர்கடவுளாலயத்தைக்கடிந்தனராய்த்தமமனமே
ஐயனுர்தலமங்கேகலென்னென்பாருநரகெய்துவாரவரே. (ҧҧ)

என்றனனுங்கணிருந்துழிச்சுகனுமிருசெவிக்கமுதெனக்கேட்டு
நன்றெமையளித்தநாதனேயொன்றுநவிலுதல்வேண்டினமதுதாம்
பொன்றியமனத்தாரயினும்புகுந்தால்புரைதபுவீட்டினையளிப்பா
னென்றியதலந்தாமெவையவையின்னேயுரைப்பதோடொண்புவிதன்னில்

மையறாப்பணத்தின்மணித்தவிசிருந்தபாரினிலேழ்தலம்பைதல்
கொய்தரும்வீடுகொடுத்திடுமென்பர்குறித்திடினவைபிரயாகை
வைவறுகாசிதுவரைவாரயோத்திவளமுறுகாஞ்சியேமாயை
யுய்வருமதுரையிவையொருஉவறவேயொளிரவுமும்பருக்கிறைவன். (ҧரு)

அவந்தியேயாதியைவகைப்புரங்களமைத்தருர்புரிவதென்னெமக்கே
யுவந்தனைகொண்டுண்டுணர்த்துகவெந்தாயொன்னலர்மணிமுடிதுணித்துக்
கவந்தமதாடக்கண்டுகண்களிப்பான்கந்தனைக்கடவுளர்க்களித்த
சிவந்தனையூன்றிமலந்தனையழித்துச்சிவமதாய்விளங்குசிற்பரனே. (ҧகூ)

வேறு.

நஞ்சுடனமிர்தந்துன்னுநங்கைமார்நாட்டவைவே
லஞ்சிடத்தவமென்றேதுமானிடையவிரத்தோன்றெம்
விஞ்சுமாதரத்தினுற்றவேதியவிழைந்துகோண்மோ
பஞ்சடைபொறியிற்பாவம்பாற்றிடும்பண்பிற்றஃதே. (௬எ)

கொந்தவிழ்த்தளிகளாருங்கொன்றையைக்குழவித்திங்கள்
பந்தமாஞ்சடையிற்சூடும்பண்ணவற்குவப்பாங்காதை
மந்தணமாகுமன்னமற்றதைமதிக்கப்புக்கி
னெந்தமாக்கதைபுமொவ்வாதிருநிலவரைப்பின்மிக்கோய் ()

வேறு.

செந்தாதுகிளைத்திழிதேன்மதுகாங்கள்திளைத்தூடுசென்றபொங்கு
மந்தாமரைப்பொகுட்டினருமறையோன்முன்னொருகாலடைவினேகி
நந்தாநற்பாற்கடலினகுமணிச்சுட்டரவினிடயந்துகொண்டல்
செந்தாமரைமுகிழ்த்தாலெனத்திருக்கண்வளர்மாலைச்சிவந்துநோக்கி (௬௯)

என்னைமுனமின்றேமென்றிருமாப்பினுறங்குதியோவெழுகவென்னல்
மன்னியவிப்புவனமிடையடங்காதோபாற்கடன்மற்றென்னையன்றித்
துன்னியதோபாப்பணையுந்தலங்கினையோநீயாகத்துணின்மற்றும்
பன்னருநின்பிறவியெலாம்படைத்தவாருண்டெனனிற்பகர்திமாலே. ()

காற்கொண்டுகிமிர்ந்தெழுந்தகடைக்காலமுகிலென்னக்காளமேனி
மாற்கண்டங்கெழுந்தெனதுமைந்தாநின்வாய்மையெலாம்வழுத்தற்பால
பாற்கொண்டபிள்ளைபலபேசிடின்மற்றவர்ப்பயந்தபரிவினோர்கள் [காலே.
நூற்கொண்டுதெளிப்பதலாற்கோற்கொண்டுபுடைப்பதெவனுடிக்குங் ()

சேலாடுகண்ணுடையசெந்திருவுங்கவுத்துவமுஞ்சேர்ந்துதோன்று
நூலாடுமார்புடையோனின்னபலநொடித்திடலும்நொய்தின்வேதன்
மாலாடுமனத்தினனுப்மண்ணுண்ணுமால்வயிறமதியாதென்னைக்
கோலாடுபிள்ளையெனக்குறித்தனையோநன்றென்னக்குலுங்கநக்கு. (௭௨)

ஆர்த்தெழுந்தானதுகண்டவமரரெலாமடுங்காலமடுத்ததென்ன [யாவுங்
வேர்த்தெழுந்தார்வெய்யோனும்வெய்துயிர்த்தான்வேலையுள்விளிந்த
கார்த்தெழுந்தகாலனுமீதென்னுற்றதெனவழுங்கக்கரியகோலத்
திர்த்தனுநன்றென்னநகைதெரித்தனனுப்கிமிர்கின்றதிண்மைநோக்கி. ()

பஞ்சாதிமறையவரும்பண்ணவருமதுகண்டுபயந்துநக்கன்
செஞ்சாதிமலரடியைச்செயசெயவென்றேத்திசினஞ்செறிந்தாரைய
மஞ்சாருமேனியனுமலரயனுமறிப்பதற்கார்மற்றுமுண்டோ
வஞ்சாதிரெனவறைந்தாங்கவர்சினத்தையடல்வேண்டுமளியமென்றார். ()

வேறு.

நக்கநல்வரநல்கிலையாமெனிற்
புக்குவாழும்புரமிலைபொன்றுவேஞ்
செக்கர்மேனிச்சிவசிவசிந்தைசெப்
தெக்கர்போக்குதியெம்பிழைவிற்றரோ. (சரு)

பாப்புமேவியபண்ணவனும்பய
மீப்பூமேவியவிண்ணவனும்வெருண்
டேப்புலந்தனரென்றழிந்தேம்பவிர்
நீப்பலன்னவர்நேர்வதுமெங்ஙனே. (சசு)

என்றுவாய்மலர்ந்திரநதிச்சடை
மன்றுளாடியமாமணிமற்றவர்
நின்றமர்த்தொழினீடியகண்ணுறீஇ
நன்றுமக்கிதுநன்றுநன்றீதரோ. (சஎ)

ஆக்கம்பொன்றியழிதகவெய்திடு
மேக்கழுத்தமிவரியெரிவிழூஉ
மீக்குலம்மெனவெண்ணினழிவராற்
றுக்கலெங்ஙன்றவிர்மின்றவிர்மினே. (சஅ)

முறைமைகொன்றிடுமுன்பைபுகுத்திடுஞ்
சிறைமைசெய்திடுஞ்சிரியவல்லவாந்
துறைமைபோக்கித்துவைக்குந்துவைக்குநம்
மிறைமையென்படுமேழ்மையிதேழ்மையே. (சகூ)

நானெனுமொன்றைநட்டுவளர்த்திடி
னீனமல்லதொன்றெய்தப்பெறுவரோ
மானம்வீழ்த்திமதியினைவீழ்த்தியாங்
கேனவீழ்த்துமற்றீனமற்றீதரோ. (ரு0)

நட்புநாரிலைநன்றிமற்றில்லையா
லொட்பமில்லையுணர்விலையுய்விலை
திட்பமில்லைதிருவிலைதெய்வதப்
பெட்புமில்லைபிறகெவன்பேணலே. (ருக)

என்னவுந்தணியாதவரேற்பதை
முன்னிமுன்னுமுதல்வர்க்குமுன்னவ
னின்னல்காணுமிவரினிவரியோர்
நன்னர்காணுதுநாமினியென்றனன். (ருஉ)

வேறு.

நாற்றிசையுலகமுநடுங்கிப்போழுறத்
தோற்றமுங்கொண்டனிர்தொலையகிற்றிலீ
ராற்றலார்திறத்தடுதென்றறியமுன்னினேம்
நோற்றநீர்கேண்மினோநுவல்வதுண்டரோ. (ருங)

எம்மடிமுடியினையிணையினீவிரே
தம்மெனவெவராதுதக்காரவரே
நும்மிருவரினுமியாரோன்மைசான்றவ
ரம்மெனவறிகுவமறிதிராற்றலீர். (ருச)

என்றனனிறைவனுமிம்மெனுமுனந்
தன்றழலுருவினைத்தழலும்வேவுறப்
பொன்றலினுலகெலாம்போக்கித்தம்பமாய்
நின்றனன்கண்களுநெகிழக்கண்டனர். (ருரு)

விளரியார்தவிசுடைவித்தகன்முனம்
பளகிலாவெகினமாய்ப்பறந்துபாய்திரை
தளர்வறுமுடிதனைத்தாவிக்காண்பலென்
றுளமலிகாதலினுரைத்துப்போயினன். (ருசு)

வானமேயாதியாய்வழங்குபூதமாய்த்
தானமாயெவற்றையுந்தரித்துக்காத்திடுந்
தேனவாந்துளவணிதெரியலானுமற்
றேனமாயிடந்தடியிறைஞ்சப்போயினன். (ருஎ)

## வேறு.

போகவதிபுகுந்துமான்பொன்னுருஞ்சினகரத்தைப்பொலியக்கண்டு
மேகவதிசயமிதுவாச்சென்னேயிவ்வடியிருந்தமெளிமைத்தில்லை
நாகமுடிமிலைச்சுமவன்முன்காணப்புக்குறினுநாட்கள்செல்லு
மாகவினித்தேடரிதாமடைக்கலமென்றவற்கு லுகியடைவலென்ன. (ருஅ)

அண்டமெலாந்தன்கோட்டிலனுவாக்கியடலரக்கன்கவர்ந்தவன்னுள்
கண்டபெருமாமாயன்களைத்திருந்தானிவ்வண்ணங்கழறிப்போந்து
அண்டர்பிரான்றனைப்போற்றியடிகளீ தடைந்தபடியண்மைத்தில்லை
தொண்டர்படிதனைக்கடவாத்தூயோனேயென்றானைத்தொழுதானிற்க ()

செம்போதன்முடிதேடித்தீமையேனின்றேனச்சினந்ததீமை
யம்போதமழித்துண்ணவாரிடர்ப்பட்டழிகின்றேனான்முன்றுன்னித்
தம்போதந்தந்திடவுந்தடுத்தயர்வாற்றருக்குற்றேன்றணிந்தேனில்லை
வம்போதவுலகென்னவழுத்தான்றன்முடிதேடவாய்ப்புற்றேனே. (ருய)

அயுதமறுபான்வருடமடைந்தனமற்றதிற்பாதியடைந்தோமென்றற்
கெய்தவருமோவதுதானெட்டுணையுமிலையிலையாலெண்ணிலென்போற்
செய்தவரார்கீழ்மையினைச்செப்பலெவனெனவயர்ந்துசிந்தைநோவ
கைதைமலர்வருகைதனைக்கண்டனன்மற்றீதறைவான்கருத்துட்கொண்டு.

பொன்மலிந்தமடற்கைதாய்போதலெவணிருந்தெமக்குப்புகறியென்ன
கன்மலிந்தவிற்கொண்டுகண்டகர்வாழ்புரமூன்றுங்கரியவெய்தோன்
சின்மலிந்தமுடியிருந்துங்குப்புற்றேன்செய்தியிதுசென்றகால
மன்மலிந்தமாமலரோய்வரைந்தெண்ணல்வழுவதுகாண்வகுப்பதென்னே.

## வேறு.

கடியேறியகைதையேநின்வரவான்
மடியேறியவென்மனமாழ்கலறும்
படியேபணிவேன்பயனீந்தருள்க
கொடியேயலையாமெனிநேகுவனல். (ருரு)

செற்றூர்புரமூன்றைறபுஞ்சேவிடைமேன்
முற்றூமுடிபெய்துறமுன்னகையா
விற்றூரவரீசனெனத்தெரியே
னற்றேனளியார்முடியாதரவால். (ருச)

கண்டேவருவல்லெனக்கட்டுரையா
விண்டோடுவெகுண்டிவண்வந்தனன்யான்
றண்டேலெனையாளுதியான்றனிமை
கொண்டேனிதுகூறுவனீகுறியே. (சுரு)

வந்தான்முடிகண்டுவழுத்தியயன்
சிந்தாவிழுவேனெடுசேர்ந்தரநின்
பைந்தாதுகுபாதமலர்ப்பதியா
வெந்தாயிழிந்தானெனவேற்றுதியே. (சுசு)

ஈதொன்றையிணைத்திறையோன்முனநீ
மாதொன்றவழுத்திடினியான்மறவேன்
றீதொன்றுமிலைத்தெரியின்றிகழ்வோய்
கோதொன்றெனைக்கூட்டுதிகொள்கவிதால். (சுஎ

என்னேயிறைவன்முனம்யானெளிதே
கொன்னேவழுகூறிடிற்குற்றமெனத்
தன்னேயறிவானிதுயான்றரியே
னின்னேயநிலைக்கநிகழ்த்துவனல். (சுஅ)

என்றேயெனியேன்றிடமற்றதுதா
னன்றேயெனநான்முகனும்நவிலாச்
சென்றேசிவன்சேவடிசெப்பிவல
நின்றேபணிநேடியடைந்தனனல். (சுசு)

கரியாரெனிற்கைதையெனக்கழறிப்
பெரியேனெனநின்றிடுபெற்றிதனைத்
துரியானெதிர்கண்டுலகந்துவளத்
தரியானுரைதந்திடுவான்றனியோன். (எய)

வண்டார்மலரோய்வருவாய்வழிபோய்
தண்டாமலுரைத்தனையாந்தணியோ
முண்டாமுலகுள்ளுனையேபணியுங்
கண்டாமணியாலயங்காண்கிலையால். (எக)

பொய்ச்சான்றுபுகன்றிடுவான்புகுதூ
மச்சொன்றுமிலாதவழற்கைதாய்
வைச்சொன்றமுடித்திலனுன்வழுவால்
சிச்சியினிசேர்கதிநிற்கிலையால். (எஉ)

என்றானருஞ்சாபமதேற்றதனை
னன்றேயிலைகோயிலுநான்முகனுக்
கன்றேகொடுகைதையுமம்முடிபி
லொன்றுவொளியோங்குதலில்லையரோ. (எங)

நித்தனிவைகூறவுநீடியமால்
பைத்தம்புயபாதமலர்ப்பணியா
வத்தாவெனையாளுதியாளுதியென்
றித்தாரணிதன்னிவிறைஞ்சினனே. (எச)

பொய்த்தாயிலைபூதலமுண்டபிரான்
நித்தாவெனநின்னைநிகழ்த்துவனல்
சத்தாயிதுகொண்டுதலந்தொறுநின்
றெய்த்தார்பிழையெள்ளலைநீக்குதியால். (எரு)

என்றேயரனேகினனியாமினியே
நன்றேதிரிவேணியினன்மகிமைத்
தொன்றேய்புலமைக்கிசையத்தொடர
வின்றேதருவல்விதையேத்துவிரே. (எசா)

அரியயன் அடிமுடிதேடுபடலம் முற்றும்.

ஆகபடலம் ச-க்குச் செய்யுள் களக.

---

# ரு. திரிவேணிப்படலம்.

உலகமுன்றையுமொளியினல்விளக்கியபோழ்தாங்
கிலதுமைந்தலைய தனிடையெழுந்தனவெழிலார்
தலங்களைந்தவற்றிடைநனிதயங்கிய தாவில்
புலங்களைந்தையும்வென்றநீர்கேண்மினேபுகல்வேன். (க)

பிரசிதன்னிடைப்பிறங்குதற்புருடமென்றுரைக்குஞ்
சிராதலத்தினிற்சிவணியபூகயிலாச
மராவினுக்கொருமுடிதனிலணிபெறத்திகழுந்
தராதலத்தினிலொப்பிலையதற்கொருதலமும். (உ)

அவாசியிற்றிகழகோரமாமுகத்தினிலடைவே
பவாதிபந்தமேபறித்தருட்பகவனுமிராமன்
சிவாவெனத்துதிசெப்பியதலமதன்சிறப்பைத்
துவாதசத்தரும்புரிந்தொளிபெறுவர்தோத்திரமே. (ங)

பச்சிமத்தினிற்பணிந்திடுசத்தியோசாத
நச்சுமானனநண்ணிடுமாயிடைநவிலின்
கொச்சைநம்வினைகுலைத்தருள்கோகருணப்பேர்
பொச்சமில்நலம்புணரிசூழ்புவிதனிற்பொலியும். (ச)

உத்தரத்தினிலுயர்வுறுவாமதேவம்மென்
மத்தமாமுகமன்னிடமற்றதிற்காசி
யித்தலத்தினிலுயிரதினிறுதியதெய்திற்
றெருத்துமுற்பவந்தொலைந்தனமுத்தியிற்றுலங்கும். (ரு)

மத்திமத்திலீசானமாமுகமதின்மகிழ்ச்சி
பொத்துதக்கிணப்ரயாகையாம்புவிபுரிதவத்தாற்
பத்திசெய்பவர்பவமெலாம்பண்பினிற்போக்கிச்
சித்திமுத்தியாதியவெலாஞ்சேகுறக்கொடுக்கும். (சு)

தேவதேவன்றன் றிருவுருமைந்தகேத்திரங்க
ளாவதில்லையாங்கூறிடினெனலுமச்சுகன்றான்
நாவலங்கொடுவருளியநன்றெமையின்றேய்க்
யீவதின்னமுண்டெனவவன்பதமலரிறைஞ்சி. (௭)

யாமியப்பிரயாகையையாமிதுகாறுந்
தோமகன்றிடக்கேட்டிலந்துனையுமற்றதனன்
ஞுமமாதியயாவைவுநவையறநல்கிப்
பேமகன்றிடச்செய்கெனப்பெரிதுவந்தனனே. (௮)

மாற்றநன்றதாமைந்தனீகேட்டனமகிழ்ந்து
நோற்றதின்பயனுலவைநமக்குரைதுணிந்தேம்
போற்றுசானவிபுலமகள்யமுனையேபொருந்து
மேற்றமல்கியவிடம்பிரயாகையென்றுரைப்பர். (௯)

அன்னதேதகவகலிடத்தமுதிழிந்தன்ன
பொன்னெடுங்கலைமகள்சிவேதையிற்சுரநதிபோந்
தன்னையேயெனவளித்ததிற்சேரலாலதனை
யுன்னிதக்கிணப்ரயாகையென்றுரைப்பரொள்ளியரே. (௧௦)

விதிக்குமாற்றலர்வேதியர்வேதமந்திரத்தைப்
பதித்துநெஞ்சிடைப்பரசினர்வழிபடப்பகல்செய்
துதிக்குநாயகன்றொல்புகழ்க்குலத்தினுக்கொருவன்
றுதிக்குமேதினிப்பகிரதப்பெயருடைத்தோன்றல். (௧௧)

புகலுமாதவக்கபிலனென்றேவரும்போற்றுந்
தகவுசான்முனிதணிந்திலன்சினந்தெரிவிழிக்கப்
புகலிலேமெனப்பொடிந்தடர்சாம்பராயினரென்
னிகலுடைக்குலப்பெரியரென்றேக்கமீக்கொண்டான் (௧௨)

எங்குலப்பெருங்குரவர்களிழிந்தனர்நிரயந்
தங்கிப்பற்பகலளித்தனன்றாரணிதமியே
னிங்கெனக்கிதுவழகிதாலழகிதுவினிநான்
மங்குமன்னவர்பீழையைமாற்றுவன்மரபால். (௧௩)

என்றுகொண்டனனிருந்தவக்கென்னிமேனெம்மோ
ரின்றுகொண்டனேயுலகினையாற்றுதிபென்ன
வொன்றுமாமதிச்சுமந்திரற்குரைத்தனனெழிந்தே
வென்றவண்டகைபோயினன்வியன்மலைச்சாரல். (௪௪)

திசைமுகத்தொருதேவனின்னருளினாற்கங்கை
விசைமுகத்தொடுவிண்ணிழிந்துறவிரைந்துன்னி
நசையகற்றினன்றவம்பலநாட்டினனள்ளார்
திசையுருட்டியதிகிரியோன்றிறமெவன்செப்பல். (௧௫)

விடையெருத்தமீதிறைவனும்விரைந்துவந்தனுகிப்
படைமுருக்கியபார்த்திபநன்றுநின்றவப்பாங்
கடைவதென்சொலாயளிக்குதுமென்னலுமரசன்
சடையிற்கங்கையைச்சரித்திடவேண்டுமோல்சாத. (௧௬)

மங்குலன்னவன்மழவிடைப்பாகனைவழுத்திக்
கங்கைபெற்றுடன்களிப்பொடும்வருகின்றகாலை
சங்கையோட்டியசன்னுவின்சாலையையழிக்கத்
துங்கநற்றவன்றுனியொடுமருந்தினன்றுவட்டி. (௧௭)

பட்டபட்டதன்பாடெலாம்பணிந்தனன்முனிக்குச்
சொட்டமின்றியேசோகுடன்சொல்லினன்சொலவுந்
தட்டலின்றியேதணிந்துதன்செவிவழிதளத்தி
விட்டனன்னெரிவீடினோர்வீடுகண்டுவந்தார். (௧௮)

கடுக்கைவார்மதுகலக்கியீங்கிழிதருகங்கை
யடுக்கல்பற்பலபோழ்ந்தகன்கிடக்கையாமவனி
யுடைக்கையுற்றனளுற்றவருற்றவர்தங்கண்
மிடுக்கையாவையுமிசைந்தமீப்புகழுடன்மிளிர. (௧௯)

புலிங்கமேவுகட்பொறியுடைப்புனிதனைப்புகழ்ந்து
செலுங்கதிக்கயர்சிந்தையோர்சிறந்திடக்கங்கை
தலங்களார்ந்திடுதக்கிணம்புகுவல்யானெனலு
மலங்களற்றிடமன்னுகவென்றனன்மற்றும். (௨0)

மணிகொள்முத்தையென்றுறுபெயர்புனைந்துமாநிலத்தோர்
பிணிகள்வீட்டுவான்பெயர்ந்தடைகங்கையாம்பேதை
யணிவகுத்திடவாங்குறுமதன்சிறப்பினையா
மெணிவகுத்திடக்கொண்டனமிதமுறக்கேண்மின். (உக)

கோழியோங்கியகொடியுடைக்குமாரனும்புதல்வன்
வாழிவேட்டகம்வைகியேவான்மதப்புழைக்கைக்
காழிகுத்துடன்கதிரமாத்துண்டமுங்கனவு
மூழிருட்டெரகையொதுக்குயர்மணியினையுகுத்து. (உஉ)

நடைமலைக்குழாநாகிளங்கன்றினைப்பற்றித்
தடைஇயநிற்கிலதாடடுமாறிடத்தருக
ணுடையகற்றிலாநொறில்வயமடங்கலேறீர்த்துக்
கடைஇயவேகமாய்க்கடலொடுமிடல்தரக்கடுத்து. (உங)

தனக்குமாற்றவடாங்குறுதலமெனத்தணியா
மனக்கடுப்பினின்மங்குலுமாழ்குறுமாணு
நினைக்கவுந்தெறுநெடுவனநீர்வனமாக
வெனைத்துமார்த்தவணிரிதரவேகிடுமினிதே. (உச)

குருந்துயாகதிகொன்றைகாயாமலர்குல்லை
திருந்துவில்லமேயாதியதிரைகொடுந்திருகி
வருந்தவானிரையோட்டியேவழிவழியண்டர்
பொருந்திவாழ்தலம்புகுந்தளையுருட்டியேபொருது. (உரு)

ஆசினிப்பலாவடர்கரும்பூகமோடணியார்
பூசனைக்குறுபுதுமலர்ப்பூதவம்புடைத்துக்
காசினிப்பொறையணங்கருமேனியிற்கஞுலுங்
கோசிகத்தினிலொளிதருங்கோதிலக்குடிஞை. (உசு)

சாதகேதகைசாடியேசலசலப்பெண்ணை
மோதியாதரமுற்றுறமொகமொகமுடுகி
யாதிநாயகனடிபிரிவாற்றவார்கலியின்
மீதுபோகியதெனவுரைமிளிரமேவுறுமே. (உஎ)

மலருங்கொன்றைமாசுணமொடுதாதகிபுன்னை
குலவுபாடலங்கூவிளங்குரவுவாருழிஞை
யுலவுநீரிடையொருவறக்கொண்டுகைத்தலினு
னிலவுவார்சடைநிமலனைப்பொருவுமந்நீத்தம். (உஅ)

விசயவேலுடைவீரர்தமிருக்கையின்விரவிப்
பசையகன்றிடாப்பருதிவாளொடுபணைதண்டங்
கசையகார்முகங்கம்புவாதியகடைக்கூட்டி
விசையின்வார்தலால்விண்டுவாமெனவுறும்வெள்ளம். (உகூ)

விரிமலர்ப்பதுமங்கண்மீவருதலான்விழையத்
தெரிபுநான்கவாமுகமெனுந்திசைதொறுஞ்செலலா
னரிபுகன்றிடவரித்தலானவனியையயனைப்
பொருவுநீர்மையதாமலிவுடையதப்புதுநீர். (௩0)

பட்டிமைச்சொலும்வாயுடைப்பதட்டவாவிபர்போ
னட்டமுற்றிடநண்ணுபுநற்புலமியாவுங்
குட்டமாக்கியுங்குளங்குவடாக்கியுங்குதித்து
மிட்டம்போற்புரிந்தேகிடுமியலதவ்வெறிநீர். (௩க)

கோட்டுவாரணங்குத்தலாற்குவட்டினின்றிழியுந்
தோட்டுவார்மதுத்துவன்றியதுணைவொடுங்கலந்து
மோட்டுமால்கரைமோதலான்முறைமுறையறிபு
நாட்டமில்லவர்போனடமாடியகறுநீர். (௩உ)

வேறு.

கள்ளுடைக்கமலப்போதிற்கயலடைதோற்றங்காசில்
துள்ளுநீரரம்பைமாதர்துலங்கயில்வேற்கண்காட்டு
நள்ளிரவகற்றுங்கூந்தனறியசைவலமேகாட்டும்
வின்னுவாய்முறுவல்காட்டும்வெள்வளையின்றமுத்தம். (௩௩)

மாந்தர்க்காமினத்தாலூறுமனவுணர்வென்றுகூறப்
போந்ததுகடுப்பநீர்மைப்புலந்தொறும்வேறதாகிச்
சாந்தமெட்டுணையுமில்லார்சார்தருகதியைமான
நீந்துறுவெள்ளஞ்சென்றநெறியலாநெறியின்மாதோ. (௩ச)

பைத்தலைநாகம்பாரேழ்பரித்ததன்பொறையாற்றுமற்
செய்த்தலைபுலகின்மாடேசிவணியகிடந்ததம்ம
கொத்துறுதலைவிரித்துக்குடக்கொழிகுணக்கிற்போந்த
தொத்தறலுவரிபுக்கதுயர்மணிமுத்தயாறு. (௩௫)

மலைபடுபொருள்களியாவுமறவர்பாலளித்துமாற்றுச்
சிலையயில்பேழைவவ்விச்செறிமுசுக்கலைகளெய்து
தலையணைசேக்குமள்ளர்தங்கையிற்கொடுத்துத்தள்ளிப்
புலைமணத்திமிலரேசப்போயதாழ்புணரியூடே. (௩௬)

குத்திரச்சிமையம்வீழக்குலமணிக்கற்றையோடு
சித்திரகாயங்கண்டுசினந்தெரிவிழிக்கச்சிந்தி
நெய்த்தலைபுகிர்மாஞாளிநீந்திமான்பிணையைக்கவ்வ
முத்துடைவளைகளேங்கமுரிநீரடைந்தவன்றே. (௩௭)

புகைத்தசொல்லேற்றின்மாண்டபொன்னகர்ச்செல்வமீளத்
தகைத்தபாற்கடலினாகந்தறியெனநட்டுப்பாந்த
ளுகைத்தனரசுரர்நாகருரமிறக்கடைந்தவோதை
மிகைத்ததோவென்னமள்ளர்மிகுதியான்மிடைந்ததார்ப்பு.(௩௮

காண்டகுகயங்கடோறுங்கடைசியர்குரவைபம்பு
மீண்டியவயல்கடோறுமெறிமணிக்குப்பைகொண்டு
தாண்டியதரங்கநீத்தந்தடைப்படத்தகைபுமள்ளர்
வேண்டியகொண்டுமீதிவியத்தகுகடலுக்கீவார். (௩௯)

விலைபடுமணியுமுத்தும்வேண்டலர்வெறுக்கைமிக்கா
ரலைபடுமவனிமாதினரும்பயனடைவிற்கொள்வான்
றலைபடுதொழிலுக்கெல்லாந்தலைபடுதொழிலதென்னுங்
கலைபடுமறிவின்மேழிக்கடவுதன்மேற்கொள்வாரே. (௪௦)

வேறு.

மோட்டிளந்திமிலுடைமூரிச்சேவிடை
பூட்டினர்பகட்டொடும்பொருத்திமாநிலந்
தாட்டுணைவலமுறத்தரிக்குமாரம்போ
லோட்டினரொய்யெனவுழவுதுன்னவே. (௪௧)

மள்ளர்கோல்கைக்கொளமனத்தைதவென்னிடும்
பொள்ளமில்கவையடிபொதுக்குமாமணி
கள்ளவான்மலர்கயவாயில்பெற்றிடுந்
துள்ளியசேலினந்துவைக்கும்பண்ணையே. (௪௨)

வளையொருபுறமுழவயலிற்றங்கிய
களைமடிதரவகங்கனியச்சேதகந்
தளையவிழ்நறுமலர்தணியத்தாடுவைத்
திளையருமுழுவரேரிகலியெங்கணும். (௪௩)

பறம்புறப்போக்குநர்சிலவர்பான்முளை
நிறம்புறவித்துநர்சிலவர்நீர்வய
லுறம்பெறவூட்டுநர்சிலவரோகையின்
மறம்பலபேசுநர்சிலவர்மள்ளரே. (௪௪)

பரிதலையசையகொய்புளையிற்பாவிய
விரிதலைநாறுசெய்முடியைவித்திடச்
சரிதலையின்றியேசமனநாட்டுவர்
பெரிதலைநிகர்குழற்பேதைமார்களே. (௪௫)

வாக்குறுகேதறலைவளைந்தவிக்குலம்
போக்கினர்மாற்றியேபொருந்தகில்லரா
யூக்கியமனத்தொடுமுணர்வைநீக்கினர்
தாக்குவர்கைவளைதகரத்தாமரோ. (௪௬)

தாலியைவிக்குதங்கணவர்தாவியே
சேலையைவீக்கியேசெறிக்கச்சென்றவர்
மாலியைபகன்றிடமறித்தும்வான்களை
கூலியைவேட்டிலர்குலவக்கட்டுவார். (௪௭)

புரிவனயாவையும்போகலின்றியே
தெரிவனதெரிந்துதாந்திமிரவாற்றினர்
விரிவனசாலியைவிழையத்தாயினும்
பரிவினினோக்குவார்பகாப்பண்பினே. (௪௮)

படிதலைபயிரடைபசியசூலெலாங்
கடிதலையரவினங்கான்றகுட்டிக
ளிடிதலைவாளெடுமிகலியேன்றன
வடிதலைநிமிர்ந்துநின்றழகிற்றன்னவை. (சகூ)

இனத்திழிதகவினரிடையிற்செல்வமே
யனைத்தெனவருங்கதிரமன்றவூனமங்
கெனைத்துமேயின்றியவிற்கணுற்றவர்
தனத்தினேர்தகநனிதணிந்துகாய்த்தவே. (ருo)

ஐந்தெனும்புலத்தினராரவுண்குபு
புந்திகொள்விளைபுலம்புகுந்துமள்ளர்க
ளெந்திரமெனவரிந்தேம்பலின்றியே
யந்தில்சேர்த்திடுவதோரமலைத்தெங்கணும். (ருக)

தேழிப்படைநெற்குவைதிணரப்பண்டிகொண்
டழிப்படைவில்லதோரகலுள்ளாக்குவர்
விழிப்படைகாத்திடாவிளைபுட்டன்னதோர்
செழிப்படைநாடுநாஞ்செப்பவல்லமோ. (ருஉ)

நிலந்துறுபயனெலாநெறியினெண்ணினர்
கலந்துறமுதிரையாதியகளெல்லவும்
வலந்தனர்கொண்டதம்மனையின்வாழிய
குலந்தரக்கூட்டுவர்குதிரின்முந்தவே. (ருஙு)

ஆலைவாய்ச்சாற்றினையட்டதூமமென்
சோலைவாய்ச்சேறலுஞ்சுலவுநீர்த்திரை
காலைவாயருந்துகார்முகிலென்றுன்னின
நீலவாஞ்சிறகரைநெகிழ்க்குமஞ்ஞையே. (ருச)

இசையளிதரவெழிற்காளகண்டமே
வசைபறுபனுவலைவகுக்கவஞ்சிக
ணசைநனியெனநடநண்ணலுற்றன
வசைவிலவடவிகளமர்ந்தபுட்குலம். (ருரு)

மண்ணுறுபுனல்கொளவளர்ந்ததாழைகள்
விண்ணுறுபுனல்கொளவிளைந்ததோற்றமே
தண்ணுறுமொருவருண்டணியவுண்டவர்க்
கெண்ணுறுபகைவழியேகலொக்குமே. (௫௬)

தேனுலாம்பொதும்பரிற்றேவர்போந்துத
மூனுலாமசதியையொழிப்பரும்மெனக்
கானுலாமலர்தொறுங்கரியவண்டுகள்
வேனிலான்வெற்றியைவிழையவிள்ளுமே. (௫௭)

கனைத்திடுமேதிகள்கயங்களிற்புகூஉ
நினைத்திடக்கன்றினைநெறித்தமாமடி
தனைத்தடவிதழ்க்கமலங்கடாம்பிழீஇ
யினைத்தெனப்பாற்கடலிழியும்பாலதே. (௫௮)

இரவலரின்மையாலீவதில்லைபால்
காவினரின்மையாற்காப்புமில்லையால்
பரிவினையன்றியோர்பகையுமில்லையால்
பிரிவினையன்றியோர்பிணியுமில்லையே. (௫௯)

இன்னனவளங்களிற்சிறக்குந்தெய்வமா
நன்னதிப்புனலொடுநண்ணும்புண்ணிய
தொன்னதிவளமைபுக்தொகுப்பலோர்திறால்
தன்னெனுமுவரையினைத்தணந்தசெல்வரே. (௬௦)

வெண்கலைவெண்பணிவெண்சலசத்துறு
பண்டலைக்கோடுகொள்பனுவலாட்டிதன்
கண்களுழ்வுற்றனள்கமலநான்முகற்
கெண்கொளவிதினையியம்புவாளரோ. (௬௧)

உமையொருமைக்நனையுவப்பினின்றனள்
கமைவருமுலகுகற்கதியையுற்றிட
விமையவர்தளபதியென்னச்சூர்முத
லமைவுறவென்றனனவாசிக்கேகவே. (௬௨)

அன்னவண்மாற்றவளருள்செய்கங்கையென்
றுன்னிடவுலகினிலுதித்துப்போயினள்
பொன்னவள்காமனைப்புகலவீன்றன
ளென்னினுமேழைகளினியுண்டாவரோ. (௬௩)

கொண்டவர்பலமலாற்குணிக்கின்மங்கையர்க்
குண்டுகொலுரனிதைபுணரகில்லிரே
யெண்டிசைவிபுலையையீன்றுமென்பயன்
றண்டிடேனுவியைத்தணப்பல்காண்டியே. (௬௪)

என்றழிதரவயனெஞ்சலெஞ்சலை
பொன்றிடினன்னமேபுவியினென்பெயர்
நின்றிடுமோநினைநினைத்தவண்ணமே
யொன்றினகேளுணர்ந்தீவலென்னலும். (௬௫)

இருந்தவரேன்றனையென்மீதன்பினை
பொருந்தவெள்மனமலர்புகுந்தநாயக
வருந்தலைநதியுருவமுத்தப்பெற்றியான்
றிருந்தியபுவியிடைத்திகழுவேனென. (௬௬)

நன்றுநீவேண்டினைகளினக்கிள்ளையே
கன்றுதல்விடுமதிகானமண்டிய
சென்றனைசிந்துவாய்ச்செறிதியென்றலு
மன்றவள்போயினளறிதிர்நீர்மையே. (௬௭)

விசித்திரகிரியெனும்வேதண்டம்புகூஉ
வசித்தெதலாமகன்றிடவருளேமீக்கொடு
நசித்திலதெய்வமாநதியென்றேவரும்
புசித்திடச்சென்றனள்புவியின்மீதரோ. (௬௮)

கன்னியென்றகந்தையாய்க்காத்தியாயனன்
மன்னியசாலையையடுத்துமற்றது
துன்னியசிருக்கொடுசிரவந்தூக்கியே
பன்னியபோயதுபணிதலின்றியே. (௬௯)

கோதித்தருந்தவன்சொலுங்குணத்தைப்போக்கினை
மதித்தலைதோயமாய்வருதன்மாற்றினே
னிதுத்தலைசுமந்தனையேகுகென்றலும்
விதிர்த்தனனெஞ்சொடுவிளிவைமுன்னியே. (எ0)

ஐயகேள்சாபநீயதையவஞ்சினே
னுய்யவேவிதியினியுதகமாகுவான்
செய்யனேசினவலையெனலுஞ்சிந்தையாற்
றையலாய்நின்றவடனிமையெண்ணினன். (எக)

விதிபுணர்தேவியென்றுணர்ந்துவேதியன்
றொதுயலைப்போக்குவானுலின்செல்வியே
நதியெனச்சலசையாநங்கைமுத்தையிற்
பொதியுநாட்போமதிபுணர்ந்தங்கென்றனன். (எஉ)

வேறு.

பின்னமுற்றிடுதன்செயன்முடித்தனன்பிறகு
சொன்னமாதவச்சனகனேயாதியர்சூழன்று
அன்னைமாழ்கலையகற்றுதல்தனையருக்கடுத்த
தென்னப்புக்கனரிருங்கடன்முகட்டினிலொருசார். (எ௩)

அஞ்சலித்திடுகையினரார்த்திமீமிசையே
விஞ்சதோத்திரம்விழைந்தனர்விரிந்தபாற்கடலிற்
றுஞ்சவாவிலைதொழுதிடத்தோன்றினைதுரிசில்
கஞ்சவிபலமலர்தருகருமுகிலென்ன. (எச)

இருசுடர்த்தனிக்கடவுளிருபுறமிலகு
மரகதத்தனிக்கிரிமலர்மாதொடுமருவி
யுரகமீமிசைக்கிடந்தெனவொளிர்மணிமகுடச்
சிரமசைத்தருள்செவ்வியோய்செவியுறக்கேட்டி. (எரு)

வேறு.

நேறிநின்றதவஞ்செய்யும்நீடுமறையந்தணர்கள்
வெறிநின்றமயக்கமெலாம்விடுவான்வியன்மனத்தா
லறிநின்றபொருளதுவாயயனின்றோர்க்கறிவரிதாய்ப்
பொறைநின்றஞாலத்துப்பொன்றுதோய்நீயன்றே. (எ௬)

அண்டமெலாமுண்டாய்நீயளித்தன்றிக்காத்திடுவான்
கொண்டலெனநின்றாய்நீகுறிக்கின்றவெப்பொருட்கும்
பண்டையிறையானாய்நீபாவுமறைதேடரிய
தண்டலிலாவறப்பயனீதகவென்னதகவேயோ. (௭௭)

நறைதுளும்புந்துழாயலங்கனகுமணித்தோட்புறமசையச்
சிறைதுளும்புங்கலுழன்மிசைச்சேவிக்கத்தேவரெலா
முறைதுளும்புமாதியெனவும்பலூரந்தழையவிசைக்
கறைதுளும்புந்திகிரிவிடுங்கடுப்பென்னகடுப்பேயோ. (௭அ)

வேறு.

வானாதிபூதங்கள்வாயவிரித்தவைநீ
யானாயெனமறைகளார்க்குமகன்ஞாலக்
கோனாகிச்செய்யுங்குற்றேவலுமாகித்
தானேபரமாய்த்தயங்குந்தனிமையனே. (௭௯)

என்றுங்கினையபலவேத்தியெழின்மறையோர்
நின்றாரிடர்தீரநேர்ந்தான்கலுழன்மிசை
யொன்றாத்தவமுடையோர்க்குள்ளகுறைதனதா
மென்றாளிணையாருமில்லாவிறையோனே. (அ0)

வேறு.

மலங்கடிகெஞ்சுடைமறையவர்குழாஅங்
குலுங்கினர்தோத்திரங்குழையச்சொற்றனர்
நிலங்கடைநின்றனர்நிமலன்றாண்மிசை
யிலங்குதஞ்சிரமுறவிறைஞ்சினாரரோ. (அக)

எங்களையீன்றவளிடரின்வைகிடப்
பங்கமில்மொழிபெறுபான்மையாதிய
வங்கணன்செவிபுறவடைவிற்சொற்றனர்
புங்கவனன்றெனப்பொறியைநோக்கியே. (அ௨)

என்மகிழ்மார்பிருந்திறைஞ்சுமன்பரை
நன்மனங்கொண்டவர்நடுங்கனீக்கிடுந்
துன்மனங்கொண்டிடாத்துணைவிநீபெறு
நன்மகன்மனைவியினலிவைப்போக்குதி. (அ௩)

என்னலுமேழிருபுவனமீன்றிடு
மன்னையுமருளெனவஞ்சலித்தனள்
பொன்னியல்சுதர்சனப்பொறையிற்புக்கனள்
கன்னிநன்னீத்தமாய்க்கடிதியங்கினள். (அச)

மூன்றொடுமொன்றெனுமுறுக்கவிழ்ந்திடு
தேன்றுளிமலர்கொடுதிருவில்வீசிடச்
சான்றவர்பழிச்சிடுசலதிசுற்றிய
நோன்றிடுபுவிக்கணேநோன்மைசாலவே. (அரு)

தான்வளர்கடல்புரைதகுநிறங்கொடு
கூன்வருபிறைநிகர்கோட்டுக்கோலமா
கான்வருகழலடிகதுவப்போற்றிய
தூன்வருபிறவிநோயொளிக்கவுந்தியே. (அசு)

நீட்டுகைம்மாவுரிநிமலனூர்துறை *
பூட்டியவிருகரைபொருதுதோய்ந்தவர்
சேட்டைசெய்பவமெலாந்தேய்த்துச்செல்கதி
காட்டுறும்பான்மையிற்கஞலுநீரதே. (அஎ)

அள்ளியுண்டகுதியதசனியெஞ்சிடு
கள்ளிகொள்காட்டகங்காந்துகாறிய
கொள்ளிகொள்தலையுடைக்கொதிக்கும்பன்னகம்
பள்ளிகொண்டன்னதுபனுவலார்ந்தது. (அஅ)

வானிடையரம்பையைவழுவுகூறிய
வூனுடைமாதர்களுலவித்தோய்தலாற்
கானடைமான்மதக்கலவைச்சேறொடுந்
தானடைவெள்ளநீர்தருக்கிச்செல்லுமே. (அகூ)

---

* க. காலியானூரென்னும் ஆதிதுறை. உ. திருவாலந்துறை. ங. திருமாந்துறை. ச. ஆடுதுறை. ரு. திட்டகுடி யென்னும் வசிட்டதுறை. சு. திருஅறத்துறை. எ. பிலாந்துறை யென்னும்முடவன்துறை.

மருவழிமதுமலர்மடியமல்கிநீர்
வருவழிப்பொருளினைவவ்விவார்தலாற்
றிருவழிகாமியர்செல்வந்தேக்கிய
கருவழிமனமுடைக்கணிகையொக்குமே. (௯0)

அஞ்சிலம்பெனதனியரற்றுமோதிமங்
கஞ்சமென்மலர்தொறுங்காணுங்காட்சிய
விஞ்சியவுருக்கொடுவேதன்காதலி
தஞ்சமென்றடைந்திடுதன்மைமானுமே. (௯௧)

சுழித்திடுமழித்திடுஞ்சுலவுநீர்த்திரை
தெழித்தனவேகிடுஞ்செலவைத்தேறிடிற்
பழித்திடப்பிறப்பதுமிறப்பதும்பகர்ந்
தொழித்திடாசென்மமென்றுணர்த்தலொக்குமே. ()

கண்ணிடைகழைமணிகரியின்கோட்டுதிர்
தண்ணிடைமணிகளைத்தழுவிச்சார்தலால்
விண்ணிடைமீனினம்விழுங்கிமஞ்சின
மண்ணிடைப்பொழிந்ததைமானும்வெள்ளமே. (௯௩)

உருண்டனமலைமுடிபுதைத்தயாளிகள்
தெருண்டனபாய்ந்திடுந்திண்மையற்றிடும்
மருண்டனயானைகள்மகரநீரிடை
யிருண்டனநிழலொடுமென்னும்பாலெலாம். (௯௪)

படிவழியடைந்தனபாதலம்புகூஉந்
தொடுவழியீதெனத்தொடரும்பண்பது
செடிவழிப்புள்ளெலாஞ்சிலம்பல்செல்வரின்
கொடைவழியிரவலர்கொள்கைபோலுமே. (௯௫)

வேறு.

அமிழ்துவந்தனளின்னணமருகுறவணியார்
தமிழ்தெளிந்தவரன்பெனத்தணிவிலடகவாங்
குமிழ்தொடர்ந்திடக்கூடினள்முத்தையென்கொடிபுஞ்
சிமிழ்வகுந்தெனச்சேர்ந்தனள்வாணிபுஞ்சிறந்தே. (௯௬)

இன்னவாறெழின் மூவருநதியெனவிளங்கும்
பொன்னவாமிடம்புணருமுக்குறும்பினையறுத்திர்
பன்னும்யாமியப்பணிபிரயாகையாய்ப்பகர்வர்
தன்னைநேருறுதலம்பிறவில்லையித்தரணி. (கஎ)

இத்தலத்தினிவிரணியகருப்பனென்றுரைக்கும்
பைத்தமாமலர்ப்பண்ணவன்பற்பகல்பணியா
நித்தனனந்தநிருத்தனங்கண்டகமகிழப்
பத்திமீக்கொடுவரம்பெறுகாதையைப்பணிப்பாம். (கஅ)

திருவேணிப்படலம் முற்றும்.
ஆக படலம் ரு-க்குச் செய்யுள் உகூகூ.



## சு. பிரமன் வரம்பெறு படலம்.

வெள்ளிவேதண்டமிசையொருஞான்றவிரைமதுவேட்டளிவிளம்புந்
தெள்ளியபாடற்றேன்பெருகுதளவத்தெரியலார்திரள்வரைப்புயத்து
வள்ளலும்வழுத்தவரைதருமகளும்வணங்கினர்வாழ்த்தொடுபரவி
புள்ளநெக்குடையவுணர்வினைக்கடந்தவுயர்பரம்பொருணடங்கண்டார் (க)

முண்டகக்கிழவன்முன்னினனுணர்ந்துமுப்புரமுறுக்கியநகையோன்
றண்டையார்பதமத்தாணடங்காணுந்தாமிலன்றமியனுக்கென்ன [னே
வுண்டெனவுளுற்றுமுரைப்பருந்தவத்தினெறிவறுபெருமையென்னின்
கண்டலாலெனதகருமம்வேறில்லைகயிலைசென்றடைகுவல்கடனே. (உ)

மூசனிதுவைக்குமுளரியந்தவிசின்முனிவான்முனிகணமூசத்
தேசுடையாழோர்தேவர்கள்முதலதெய்வதம்தேசெடுத்தியம்ப
வீசுவெண்சிறைப்புளெகினமேற்கொண்டுவிடையவன்வீற்றிருந்தருளும்
வாசவண்பொழும்பர்வளவியகயிலைவரையினைக்கண்டுகண்களித்தான். (ஙு)

வெண்ணிலாவழித்துப்பூசியதுறழும்விரிகதிர்ப்புண்டரக்கீற்றுப்
பண்ணுலாம்பணையாழ்முனிவர்பல்லாண்டுபகர்ந்திடப்பனிமதிமிலைச்சுங்
கண்ணுலாநெற்றிக்கடவுளேகணக்கின்கருதுனுஞ்சிவகணமாகித்
தண்ணிலாவிரிக்குந்தடவரைமிளிரத்தயங்குதங்காங்களைமுகிழ்ப்ப. (ச)

மாகதம்வித்திமுளைத்தனமானும்வள்ளிலைக்கொடிகளேமன்னி
யாதனம்பூத்ததெனமலர்ந்தளிகளஞ்சரிதஞ்சொலவசையா [வான்
வாதனெம்பெருமான்வரையிடைக்கிடத்தல்வல்வினைப்படாழித்திடு
காதலஞ்சிரமேற்கவித்திடுமடியார்கழல்களைப்பணிவனபோலும். (ரு)

தாங்கள்வேறில்லாத்தனிவரைக்கயிலைத்தாருவின்வளமெடுத்துரைக்கி
னிரங்குவெள்ளருவியெறிமணிக்காந்தியிகல்செயவிருளெலாந்திரண்டு
மரங்களாயுருவைமாற்றினவாகிமான்மழுக்கரத்துடையெந்தை
வரங்களையோம்புமடியவர்வதிவான்வழிவழிச்சிறந்தனமானும். (சு)

அடுக்குறுமண்டமிவையெனச்சாலுமணிமணிக்கோபுரநெருங்கி
மடுக்குறும்புவனமூன்றையுமொருங்கென்மைந்துடைமரகதமிழைத்துத்
தொடுக்கியகதவத்தோரணவாயிற்றுலங்கிடத்துணைசொலவறியா
மிடுக்கியல்விமானமண்டபமிகுத்துமிளிருமம்மேதகுகுன்றம். (எ)

அள்ளுமூண்டவிர்ந்தங்கனிலமேகொண்டுமொனிருசரணதாமரையை
யுள்ளினரியமமாதியவிழைநெறிவருசிவகதிமுன்னித்
தள்ளவிலக்கந்தாங்கியேதயங்கத்தருவுரிசடைமுடியினராய்ப் [வார்.
பொள்ளமின்ஞானப்பொன்விளக்கெங்கும்பொலிந்திடவேற்றினர்புரி

இத்தகுமுனிவரெண்ணிலர்குழுமவிருடபுமெழிற்சனற்குமார
ரத்தமில்வாமதேவர்ஜாபாலியருண்மிகவஞ்சலிபுரியும்
பத்திசெய்மின்னற்கொடிகளுமிரவிபனிமதிக்காந்தமும்பதித்துப்
பொய்த்தமாமாயைபோதவொட்டாதபொன்மதிலுடையதுக்கயிலை. (கூ)

பண்ணவிர்முனிவரிருவர்யாழ்பகரப்பரிவொடுமமரர்கள்போற்றக்
கண்ணவிர்முழவமாதியவியங்கள்கறங்கிடக்கணங்களேயார்ப்ப
வண்ணவண்பாடல்வழங்கவிஞ்சையரேவரிசைபல்லுருத்திரர்சூழக்
கண்ணுதல்வைகுங்காட்சியையெவரேகணித்திடவல்லவர்கருதில். (ய)

வேறு.

எங்குமாயாவுமாகியென் னுவாரெண்ணத்துள்ளாற்
பொங்குறுமமிழ்தவாரிபொலிந்தருள்புரிவானுங்குத்
தங்குறுவிமானச்சோதித்தனிப்பிழம்பதனைநோக்கி
யங்குறுமமரரெல்லாமணிவிழியிமைத்துநிற்பார். (கக)

விரிந்தபல்லுகமியாவும்விழையவைந்தொழினடாத்திக்
கரந்தருள்புரிவானந்திகடுத்திடுமேனிகொண்டு
திருந்துயர்மணிகளோங்குந்திணிபொலன்றவிசின்ஞானக்
குருந்தெனவைகுமெங்கோன்குறிப்பொடுங்குயிற்றிநிற்பார் (கஉ)

ஆறெருடுகொன்றையாரேயவிர்கலைமதியும்பாந்த
ளூறிடப்பிணித்தமௌலிநங்கையோர்பாதிமேனி
நீறணிநெற்றிவாகைநிலவுநேத்திரமுநீல
மூறணிகண்டத்தெந்தையொழிவிலனுணர்வின்மேலான். (கங)

கோடுவரியதளேவிக்கிக்கும்பியினுரியைப்போர்த்தே
விடுகனன்மழுமானேந்திவிழையமுத்தலைச்சூலங்கொண்
டடுவரியுரகஞ்சான்றவாடுபொற்குழையும்பூண்ட
தொடுகழல்வரிந்தபாதத்துணைமலருடையதொல்லோன். (கச)

வில்லிடத்தொடுத்துத்தூக்கும்விளங்கெழின்விதானத்துள்ளே
யல்லிடையிரண்டுதிங்களணைந்தெனக்குடுமிக்குஞ்சத்
தொல்லிடக்கோடையஞ்சியுமிழ்கதிர்பரப்பும்வட்டத்
தெல்லிடர்ப்படுத்தகாழ்கொளிணைமணிக்கவிகைநாப்பண். (கரு)

குலமணிகுயிற்றுவாயிற்குஞ்சரமுகத்துவள்ளல்
வலநிமிர்வயிரவொள்வேல்வானவன்வண்மைநந்தி
புலநெறிபிருங்கியாதிபுங்கவர்புணர்ந்துகாக்கச்
சலநிமிர்சடிலத்தண்ணல்சார்ந்தருள்புரியுமன்றே. (கசு)

உழையபன்முனிவர்நாகரோய்விலருய்ந்தோமென்று
தழையதன்பனிக்காலிர்க்குந்தனிமணிக்கவரிதாங்கி
மழையமான்மதஞ்சாந்தோடுமதுமலர்கொண்டுதூவி
விழையபூந்துமமாதிவிரித்தனர்விள்வார்நாமம். (கஎ)

மண்டலநேமிவையமாதிமற்றுலகுக்கெல்லா
மெண்டகுமிறைவன் றன்னையே தநீங்கிருநான்கென் னுங்
கண்டலமதனுற்கண்டுகளிப்பெனுங்கடலுண்மூழ்கி
முண்டகமறையோன்வாழ்த்தமுறைமையின்முன்னிஞனல். ()

வேறு.

அனகவன்புடையடியவர்க்கானந்தமளித்து
வினைகவிழ்ந்திடவீறருள்சுரந்திடுவிமல
கனகமஞ்சரிகடவுடங்கடவுளேகதியே
நனைகமழ்நறுங்கொன்றையார்வேணியோய்நமவே. (கசு)

அசத்துநீங்கியவறிவினுளானந்தவுருவாய்
நிசத்துநின்மலநித்தியமுத்தர்தம்நிதியம்
புசத்துநாயகன்மதியழல்பொருந்துமுக்கண்ணு
வசத்துவைத்தருள்வைதிகநின்பதநமவே. (உ0)

மோனமுத்திரைமுளைத்தருள்காத்தினைமுதலீ
ரூனவில்லைநின்னருளெனவிழிதருமருவி
வானவெள்ளியம்வரைக்கிறைவைகன்மங்கலனே
ஞானநாயகநாண்மலர்ப்பதத்துணைநமவே. (உக)

பராபரையெனும்பாவையர்பணிந்திடப்பதியாய்
நிராமயன்னெனநிலவுறுநின்மலக்கொழுந்தே
யராவணிந்தருளண்ணலேயருங்கடுமிடற்றோய்
விராவுதொல்பதம்விழைந்தருள்விண்ணவநமவே. (உஉ)

பருதியாயிரங்கோடியிற்பரவுமெய்ப்படிவ
சுருதியாவைபுந்தொடரொணுச்சுயம்பிரகாச
கருதிநால்வருங்காண்குறக்கல்வடமெழுந்தாய்
வருதியென்றருள்வள்ளனின்வண்பதநமவே. (உந)

இன்னவாறிறைபிருங்குணமியாவையுமியம்பிச்
சொன்னநீர்மையிற்றெழுதனனின்றிடச்சுயம்பு
நன்னர்நீவிழைவுற்றதென்னல்குவனவிலா
யென்னநான்முகனிதயங்கொண்டியம்புவனிறைஞ்சி. ()

தேவதேவனே திரிபுரநாசனே திக்குக்
காவலோம்புறுங்கடவுளே காசினிபடைப்பும்
பேவரும்பிதாமகனெனவிறைஞ்சிடுமினிர்வுங்
கோவரும்முனதருளினாற்கொண்டனன்கோவே. (உரு)

ஒருவகில்லதாமுயர்பெறும்பூதங்கடோறு
மருவமாயமர்ந்தடியவர்க்கருண்மிகவருத்துந்
திருவநின்னடித்திருநடங்காண்குறுந்திறத்தை
மருவவேண்டினன்மற்றெதும்வேண்டிலன்மகிழ்ந்தே. ()

வேறு.

படைப்பாற்றுந்தொழிலெமதுபகாருளால்பரிந்துபுகழ்பரக்கப்பூவி
னிடைப்பாலங்கிருந்தியற்றுமெழினான்குமுகமுடையாயியம்பக்கேட்டி
புடைப்பாற்றும்பொழிமதுரப்புனல்பரந்துதிரிவேணிபுணரும்பாங்கர்
கடைப்பாலாம்வினைகடக்கக்கருதினையாங்கொருவேள்விகமழச்செய்வாய்.

நினைவகற்றுநின்மலத்தினிண்முடியிலெழுந்திறைசித்தியத்தைக்காட்டும்
புனைவகற்றும்பூம்பொதும்பர்புனல்வழியும்புகல்கங்கைபொருந்துகாசி
தனைநிகர்க்குந்தக்கிணமாந்தனில்பிரயாகைத்தலத்தைத்தரிசித்தக்கால்
நினைநிகர்க்கும்வினையளவுந்தெரியாமற்போயொழியுந்திகழச்சேர்வாய். ()

கைந்நாகங்காத்தளித்தோன்கடல்கடைந்தவரையினொடுகதிர்கள்சூழ
முன்னாகம்பிணித்தடையார்மூவெயிலுமுனிந்திடயாமுனையிற்கொண்ட
வந்நாகமன்றியெமதருண்மல்குமன்புடையாரயர்ந்துவாழும்
மைந்நாகமலர்கயிலைமாண்பினொடுமெப்பதியைமதிக்கலாமே. (உகு)

தகுவரம்பினியற்றுந்தனியாகமுடிவினிலியாந்தழையச்சார்ந்து
புகுநாம்பின்புலமறியும்பொறைமுனிவர்விராழ்த்துப்புகழ்ந்துபாட
தொகுமாம்பையொடுமெமர்தோன்றினரங்குய்திபுறத்துணைத்தாடேக்கி
வெகுவரங்கள்பயிலநடம்விளைக்குதம்யாங்கண்டங்குவெளிநடிதீர்க. (௩0)

வேறு.

பின்னருநான்முகன்பேணுமப்பதி
நன்னலமருள்கெனநவையிற்றீர்ந்திடு
பன்னரும்பதியியல்பகர்தன்மேயினன்
கன்னியோர்பங்குடைக்கடவுளாதனே. (௩௧)

பிரமன் வரம்பெறு படலம் முற்றும்.

ஆகப் படலம் ௪-க்குச் செய்யுள் ௩00

---

# எ. நந்தி வரம்பெறு படலம்.

போற்றவருமாமலரோய்பொன்னுடர்பூமனொடு
மேற்றவரமிக்குடையானிகற்றூரகற்கஞ்சாச்
சாற்றவருந்தம்பதவிசாயச்சகந்துதிக்கு
மேற்றமுடையிக்கயிலையெம்மையடைந்தாரால். (க)

ஆயிடையிற்றக்கனணிமாமகளஞ்சிப்
போயொருவவொல்லோம்புடையாலடியமர்ந்தே
தீயவடைகில்லாத்திருநான்முனிவர்க்குத்
தூயவறநெறியைத்தோன்றவருளானின்றேம். (உ)

ஒழியாப்பிரமநிலையூங்கிருந்துகாட்டுறயா
மழியாவமரரெலாமறுமாமுகற்றந்து
பழியார்பகைகடியும்பான்மையெவனென்றே
செழியார்மலர்வானிச்செம்மறனைநினைந்தார். (ங)

ஏவொன்றுன்வாலியிகன்மார்பங்கீண்டவன்றன்
றாவொன்றிளையோற்குத்தொல்லரசுகைதந்தோன்
தாவொன்றவின்றதனிமகனுமாங்குற்று
வாவென்றநீவிர்வழங்குதிராலென்னென்றான். (ச)

எம்பொருட்டாலீசன்செயேதமிலாமோனமற
வம்பலராம்வாளிபலவாங்கிவலம்பெறுகென்
றும்பவெலாங்கூறிடவுமுய்யேனிதுசெவிவா
யம்பெனலாயிற்றந்தோவாழ்ந்தேனருகாகே. (ரு)

என்னச்செவியடையாவென்மாட்டுநுங்கட்குப்
பன்னட்சினமிருந்தபான்மையெனயானுணர்ந்தே
னன்னட்கொண்டன்பானவின்றீர்மன்னன்றிதுபோ
லுன்னர்பிறரையாவொட்டலர்களானலும். (சு)

பணியார்புரமூன்றும்பாழ்படுத்தான்பண்டைவிடந்
றுணியாவருந்தியருடொல்லோன்றெருடுகழலாற்
குணியாப்பெருஞ்சினத்துக்கூற்றைபுதைத்துவிதி
தணியாமகன்வேள்விதாக்கினவன்றான்கண்டீர். (எ)

அன்னோன்றனையெதிபாவாடலலரம்பு
வின்னான்டெறித்தெய்யில்வீதல்சரதம்மே
கொன்னேகுழகனருட்கோலேன்குலைந்திடலா
லென்னேயிருந்தபலனென்கணியம்பிடுவீர். (அ)

வேறு.

பிரிவறவானும்பெண்ணும்பிரசமாமலர்கெண்டெய்து
விரகமதூட்டிஞாலம்விளங்குறவிழையும்வில்வே
ளூரமறநடுங்கச்சொற்றவுரையெலாமுணர்ந்தங்கும்பர்
பாமுனக்கையமென்னுப்பணித்திடன்மேயினாரே. (கூ)

தம்பொருட்டொன்றுகோலாத்தனிப்பெருஞ்செயல்கள்மேலோர்
தம்பொருட்டாகுமென்றுதக்கவருரைகள்பல்ல
வெம்பொருட்டின்றுசென்றேயிறையவன்மோனநீக்கி
அம்புகழ்தலைநின்றோங்கியுலகெலாமொளிறுமாதோ. (கo)

தேன்றலந்தேரிலேறித்திமிரமதூழ்க்குஞ்செய்ய
வன்றலிற்கதிரைவேட்கும்வளரரவிந்தமென்னும்
பின்றலில்கணைகளேவிப்பிஞ்ஞகன்பிறங்கலீன்ற
கன்றலில்கன்னிதன்னைககலந்திடப்புரியினாங்கே. (கக)

ஒப்பறுபிரமந்தானேயோங்குருக்கிளரத்தோன்றிச்
சுப்பிரமணியனென்னுஞ்சூழ்பெருநாமஞ்சூடித்
தப்பிதச்சூரைவென்றுதகுமலர்ச்சரணந்தந்தே
யிப்பதமெங்கட்கிந்தங்கெறுழ்வலியருளுமன்றே. (கஉ)

என்றனராகவிண்ணோரிணாரணிமாரவேளும்
நன்றிலைநீதேயாகநவிந்தெமையடைந்தோர்க்கொன்று
பொன்றியேயெனினுமீதல்புகழிடைப்பட்டதன்றே
நின்றிடேனினியானீவிர்நிகழ்த்துதனின்மினென்றே. (கங)

மூவெயினகைத்துச்செற்றமுதல்வனேமுக்கணனைத்
தீவெயில்காணச்சாம்புந்திகழ்மலர்கொண்டுவேறல்
நாவெயிறணவச்செப்பாநிளங்கிழவிபொன்றுப்
பாவியல்பொருளைத்தேற்றும்பண்பதேபோலுமம்ம. (கச)

சீரடங்கியனோன்றுரைச்சிந்தையிற்சிவனைநில்லேன்
பாரடங்கலுமென்னாண்மைபகர்ந்திடப்பகைத்தசாபம்
நீரடங்கியநீள்வேணிநின்மலனெற்றிக்கண்ணால்
போடங்கிடவின்றுற்றபெற்றியேபெரிதுபோலும். (கரு)

ஆகபற்பலவேகூறியாரிடர்க்கடலின்மூழ்கிக்
கோகிலங்குலவக்கொம்பர்குணின்முரசதிரவோதம்
பாகளவியசொற்கிள்ளைபாவியதென்றலென்னா
மோகனவையமீதின்முழுமதிநிழற்றவைகி. (கசு)

பாணவில்சுரும்புநாணிப்பசுங்கழைகுழையவாங்கி
தூணவிற்றோளினானுந்துணைமலர்த்தொடையைப்பூட்டி
யேணவிலெமதுமேனிக்கிலக்கமாவெய்தலோடுங்
காணவிநுதற்கணாலேகடிந்திடப்பட்டான்கண்டாய். (கஎ)

பாகசாதனனேயாதிப்பண்ணவர்பயந்தேயோடச்
சாகரவனலமென்னச்சலமுறச்சண்டவாத
வேகமார்விடையிலேறிவிழைதருகாசிபுக்கே
மோகையார்மதனனம்பினாறுவலிகடிந்தேமில்லை. (கஅ)

நீதமாரத்தலத்தினின்றியாங்கழன்றுபோந்து
சீதமார்திருவின்சையஞ்செறிந்தனஞ்சின்னாளங்கும்
வேதையாந்தனியகில்லேம்விரைந்துகாளத்திவைகி
யோதுசிற்றம்பலத்திலுறைந்தனம்பின்னரேகி. (ககூ)

பழமலைபரிந்துசெல்லும்பதவையில்பணிந்துபோற்றித்
தொழவருமெனதுமேனிதொகுமழனீங்கிற்றென்னே
யழகிதுகாணவல்லேமடைந்ததென்னென்றுநோக்க
விழுமியநதிகள்கூடும்விந்தையைக்கண்டோமாங்கு. (உ௰)

தாவறுதரளவாறுந்தணிவிலாத்தவளவாறும்
வீவறுகலைமாதென்னும்விளங்கியவாறுஞ்சேரும்
நோவறுமிடத்திற்றோய்ந்தநோன்மைசால்வளியெம்மேனி
தாவுறத்தாபமெல்லாந்தணிந்தனவென்றுகொண்டு. (உக)

விண்வழிவிரைந்துசெல்லும்விடையினைநிறுவியங்கண்
தண்வழிநதிகடோயுந்தக்கிணதீரந்தங்கி
மண்வழியுயிர்களெல்லாமல்குமாண்பதத்திலேற
வெண்வழிஞானசத்தியெழிற்பராசத்தியோடும். (௨௨)

அருள்புரிஞான்றுநந்தியஞ்சலிக்கரத்தினோடுந்
தெருள்புரிசிந்தையோர்கடெரித்தருணூறப்பாம
ஒருள்புரிசகடமென்னவோய்விலஞ்செழுத்துமுன்னி
யிருள்புரிபவங்கண்மாயவினையதோத்திரங்கள்செய்வான். (௨௩)

மாசறுமாறையோருள்ளமலர்மிசையேகுநின்றன்
தேசுறமலருஞ்செய்யதிருவடிப்போதுபோற்றி
பாசுறுகூந்தற்செவ்வாய்பைங்கொடிபங்கில்வைகு
மேசறுபராகம்பூண்டவெழிற்றிருமேனிபோற்றி. (௨௪)

மதிமலிவேணிபோற்றிமான்மழுக்கரங்கள்போற்றி
கதிமலிகண்கள்போற்றிகாதினிற்குழைகள்போற்றி
துதிமலியேறுபோற்றிதும்பியினதளும்போற்றி
கொதிமலியரவம்போற்றிகொல்விடக்கண்டம்போற்றி. (௨௫)

வேறு.

இன்னணங்குறித்திறைஞ்சிடுநந்தியையெடுத்து
நன்னராகுகநவிலுதிவிழைவெவனெனலு
முன்னுமிந்நதியுவப்பொடும்படிந்தனையோதும்
பின்னமற்றவர்பிழைகளியாவையும்பிளிற, (௨௬)

காவியேநிகர்கண்ணருட்சத்திகளோடுந்
தூவியன்னங்கடுணையொடுந்துலங்குறுங்கமல
வாவியந்துறைவண்பதியீண்டுநீவரங்கண்
மேவியிந்திடல்விழைந்தனனடியனேன்மிகவே. (௨௭)

என்றுகூறியநந்தியினிதயமேகுளிர
நன்றுவேண்டினைநல்குதுமங்ஙனமென்னாத்
துன்றுமன்னவன்றுறுசுவறுனைவொடுந்தோன்றி
யொன்றுமாதவமோங்குமிக்கயிலையினுற்றும், (௨௮)

அல்லியங்கடியலர்மிசைவாழ்தருமயனே
புல்லியப்பதிபுகுந்தியாம்போந்தநாடொட்டே
யல்லல்வெவ்வினையகழ்ந்தணுகுற்றவர்தமக்கு
நல்லயாவையுநல்கிடுஙவிலுமப்பதியே. (உகூ)

யாமுறத்தகுந்தலமதற்கிணையிலைவேறு
நீமனத்துடன்சென்றவணெறியபல்யாகந்
தோமகன்றிடத்தொடங்குதிதோன்றவங்கணைந்து
வாமநல்லருள்வழங்குதும்வாழ்த்திடப்பலரும். (௩௦)

எந்தையின்னணமியம்புறச்செவிதொறுமமுதம்
நந்தவார்ந்தெனக்கேட்டானல்லருள்வியந்தே
புந்தியார்ந்திடப்போயினன்பூமிசைப்புலவன்
கந்தவண்பதியன்னதைக்காண்குறக்கடிதே. (௩௧)

அரந்தைநீங்கியவருண்முனிவியாதனுமறைந்த
திருந்துமிக்கதைதெரித்தனந்தெளிமினேமற்றும்
விரிந்தவேணியில்வெண்பிறைசூடியவிமலன்
பொருந்துமாநடம்புந்தியாலுரைக்குதும்புகல. (௩௨)

நந்திவரம்பெறுபடலம் முற்றும்.

ஆகப்படலம் எ-க்குச் செய்யுள். ௩௩௨

---



# அ. திருநிருத்தனப் படலம்.

---

உள்ளியவழுக்காறுதியுற்றிடாதறஞ்செய்மேலோர்
தெள்ளியமனத்தின்ஞானதீபமாய்விளங்குந்தேவ
னெள்ளியவருளைமுன்னியுற்றவஞ்சிறைப்புள்ளூர்ந்தே
விள்ளியவேதன்கண்ணால்வியன்றிரிவேணிகண்டான். (க)

தத்தலை கூடுமாற்றின் றக்கிணக்கரையின்மேலால்
முத்தலைச்சூலங்கொண்டமுன்னவன்கோயிலோங்கு
மத்தலைநகருங்கண்டானன்னதின்சிறப்பையாரே
யித்தலைபுலகினுள்ளேயியம்புதற்குரியநீரார். (௨)

வேறு.

எத்துஞானிகளிதயமேயெனநனிகுளிர்ந்து
சித்தன்மார்பகச்செம்மலைச்சிவணியெவ்வுயிர்க்கு
மாத்தவன்பொருளளித்தளவிடப்படாதகன்ற
தீர்த்தவேணியாற்றிகழ்ந்திடுந்திருநகரதுவே. (௩)

பாணிபங்கயன்படைத்தபன்னூன்கெனுமுலகி
லேணியிவ்வுலகில்லெனிலில்லையெவ்வுலகும்
பேணினர்க்குறும்பெருவளமுடையவிந்நகரம்
நாணியில்லெனினிலமென்பதுமிலையே. (௪)

தேய்வக்கற்பினர்தெளிந்தருள்காப்பியம்போலும்
வைவகற்றியவளமெலாம்வழங்குமப்பதியை
பையகத்திடும்பணமிசைப்பதித்தபார்மடந்தை
யுய்வகத்துறுமுயிர்நிலையென்பதேயுணர்வு. (௫)

புறத்துமாகடல்புகுந்துவர்ப்புணரியைத்தள்ளி
யிறுத்ததாமெனவெறிந்திடுமிலகுபேரகழி
கறுத்துநேமிமால்வரையங்குக்கடிதினிலுற்று
பொறுத்துமியாமெனப்புணர்ந்ததைப்போன்றதப்புரிசை. (௬)

கருக்குவித்திடுங்கம்மியன்கைவலங்காட்ட
உருக்குவிண்ணினையுயர்நகராக்கிடவதுதா
னிருக்கவின்றிடமென்றிழிந்தின்னிலம்போந்து
தருக்கினேங்கியதென்னலாந்தகவுடைநகரம். (௭)

ஆசுகம்பொழியம்மதிற்புழைதொறுமணுகி
வீசுகாற்றுருவிளிக்தெனன்றுனராத்திடல்விதியே
நேசமற்றவர்நினைவையுங்கடந்திடுநெடிய
கோசமுற்றியகொட்பினையாவரேகுனிப்பார். (௮)

தங்குலப்பழிதாங்குவான் றருக்கொடுமெகின
மிங்கணுள்ளனவிரைத்திறைமுடிமற்றுநேடி
யங்கண்வானத்திலலமரல்கடுப்பனவகப்பா
பொங்குவெண்கொடிபுரையறப்போகியபொலிவு. (கூ)

புதுக்குமாமணிப்பொலன்செய்தபித்திகைதோறுஞ்
செதுக்குமோவியஞ்சிவணியவத்திறஞ்செறிந்து
அதுக்கிவானவரடியொடுமகழ்ந்துபோயகல்வான்
பதிக்குமென்றிவர்பான்மையேபோன்றனபடிவம். (சு0)

கானிலம்படாக்கடவுளர்கதிவிழைவுற்றுத்
தானிலங்கியதனிமுதற்றண்ணருள்பெறுவான்
வானிலங்கொடுவழியெனவைகலும்வரவே
மேனிலம்பலமிடைவனகோபுரமிளிரும். (கக)

ஆடகத்தினலாக்கியமண்டபமகல்வான்
மோடுமுற்றியகூடெனமுன்னலாந்தகைய
நாடகத்தியனம்பனாலயம்நவிலச்
சேடனத்தியசெறிபலநாவினுஞ்சிவண. (கஉ)

சுற்றுநேமியந்தேர்நலஞ்சொற்றிடினுலகில்
கற்றதன்பெருமாண்பெலாங்கடவுளர்தச்சன்
முற்றக்காட்டுவான்செய்ததுகடுத்திடுமுன்னின்
பொற்றமேருவும்புறந்தரும்பொலிவினதம்ம. (கரு)

ஆடுகேதனத்தறஞ்சொலுமாளிகையகல்வா
னூடுபோதலாலுவணையருளங்கொதிப்பேறி
பாடுமுற்றியபதமினிப்பாருளோர்க்கன்றி
யேடுமுற்றுறவெழுதினுமெமக்கிலையென்பார். (கச)

வாசநீளகன்பொதும்பரில்வானமங்கையர்க
டேசுலாமலர்தெருண்டனவெடுத்திடக்கண்டு
வாசவன்வனகற்பகம்வறுமலருடையேம்
பேசலென்புவிபிறத்தலேபெருமையென்றுன்னும். (கரு)

அண்டர்தானவருந்தவர்சித்தர்களென்னக்
கொண்டதெய்வதவுலகினர்யாவருங்குறித்துத்
தண்டலின்றியேதனித்தனியிருந்திடத்தக்க
பண்டமைத்திடுமிடம்பலபாங்குறவிளங்கும். (கசு)

துண்டமத்தியிற்றணிவிழிதுதிமுறையிருத்திக்
குண்டிகையருகிருந்திடக்காலெதிர்தூண்டி
யண்டர்நாயகனடியிணையகத்தினிலடைக்கி
மண்டுமாதவம்புரிகுநர்மாளிகைபலவே. (கஎ)

ஆதிநான்மறையந்தணராசறுகாட்சி
சேதியாவுயிர்தன்னினுஞ்சிறப்புறவோம்பும்
நீதிநல்லொழுக்கத்தினர்நிறைகுணச்செல்வர்
வீதிமல்கியமாளிகைவிண்டலம்விழுங்கும். (கஅ)

பாவுபல்படையாள்பவர்பரிதியின்மதியின்
மேவுமங்கியின்குலத்தினர்மிளிர்புகழாளர்
தாவுநன்னெறிதப்பிடார்தறுகணாண்மையினர்
காவலோம்புநர்பவனமங்களப்பிலகாணின். (கசு)

விடைவழுக்குறூர்வினவியவில்லெனின்வேறே
யடையுமற்றதனினஞ்சொலியார்வமேகிளந்து
மிடைஇயவாணிபமேதினிமகிழ்ந்திடப்புரியு
மிடையருங்குலவெட்டியரிருக்கையெண்ணிலவே. (உ0)

தனக்குமுந்தியதகைவருங்குலத்தினர்மூவர்
வினைக்கணின்றிடவிற்றுவிற்றவர்தமையோம்புங்
கனைக்குமேதியோர்கடவுறுமேழியஞ்செல்வர்
நினைக்கும்வாழ்மனைநிகமமங்கணிபெறநெருங்கும். (உக)

உலதுதாங்குறுமேனையமரபுடையுரவோர்
கலைகள்வேண்டியகற்றிடுகாட்சியராகி
திலையவாவியசொல்லொடுந்துகளறுதங்க
ணிலையகன்றிடார்நெடுந்தெருவெண்ணிலநிலவும். (உஉ)

நஞ்சயின் றருணு தனல்லடியவர்நண்ணி
விஞ்சுறும்பசிவெம்மையையாற்றுவான்விரும்பி
யெஞ்சலின்றியேபோனகஞ்சுவைபுறவியற்றும்
மஞ்சுதங்குறுமாடங்கள்பற்பலமன்னும். (உங)

பாவணங்கெரிபண்பினர்பரிந்தனருரைக்க
நாவணங்குறுநானிலவளங்களுநளியு
மாவணம்பலமிடைவனவவ்வியனகல்வண்
காவணங்குறுசாலைகள்கலிகடிந்திடுவ. (உச)

தேவநாயகன் றிருவடிக்கேற்றியபனுவன்
மூவர்பாடியதமிழ்மறைமுறைமுறையாக
வாவலோடகம்பனித்திடவத்யயனஞ்செய்
கோவையார்நிலையங்களைக்குணிப்பரிதம்ம. (உரு)

பத்திசெய்மணிப்பாயிருட்படலத்தைவிழுங்கும்
பொத்துமின்னிசைபொதுளியவரமியதலத்தி
லொத்தமாமுரசொலிகெழுமாடலம்பலத்திற்
பைத்தமாமுகில்படக்கொடியாடுவபண்பே. (உகூ)

வாமமஞ்சரிவண்டடிவைகியபந்த
ரோமமுந்திடவுயர்மணம்புரிகுநரொல்காச்
சேமமல்கியவாச்சியஞ்சிலம்பிடச்செறியு
நாமநல்விழாநாடொறுமருதனநகரம். (உஎ)

வேறு.

வெண்ணிலாச்சொரிதருவிறைழுபுமாடமேற்
றண்ணிலாத்தவழ்தரத்தாரமென்றெணி
நண்ணுதங்கணவரைநாணமீக்கொள
வொண்ணுதலார்கரமோச்சியார்ப்பரால். (உஅ)

பதுங்குதங்கணவரின்பகருமின்னெழி
லதுங்குறுவாடியிலவிரவவ்வுழை
செதுங்கிடாத்தன்னுருசெறியத்தேரிலா
வொதுங்குறுமயிலனாருடலோங்குவார். (உகூ)

நடைவழூக்குறுதவர்நாடிச்செல்குறத்
தடையறவவர்தமைத்தாங்குமில்லறம்
விடையனார்விளங்கிழையார்கடப்மொடு
மடைபுனல்லின்பெலாமவிரவாற்றுவார். (௬0)

பிணங்கிடப்பிடியனார்பெருகுகாதலி
னணங்குறுமாடவரமிழ்தம்பெய்தென
விணங்குதம்மகவின தினியசொல்லினல்
வணங்கெடனீங்குவார்வைகறோறுமே. (௬௧)

அஞ்சனவிழியினாரரம்பைமார்களே
விஞ்சைகொளமாரேவீரமைந்தர்கள்
மஞ்சடைமலைபுரைதோளேமாறினர்
கஞ்சமென்முலைபிணைக்காணுந்தன்மையால். (௬௨)

இன்னபல்வளங்களானியன்மிக்கந்நகர்
நன்னதியாமியக்கரையினுகமை
பொன்னடைவடநிழல்பொலியத்தோன்றிடுங்
கன்னியோர்பாகனைக்கருத்திலுன்னியே. (௬௩)

பொறியடக்கியதவம்புணர்ந்துகான்முக
னறிவருகாலநன்காற்றிப்பின்னரு
நெறியுடையிட்டியுநிகழ்த்தநீத்திடு
மறிவுடையாளரையகத்திலெண்ணினன். (௬௪)

எத்தகையுலகினுமெண்ணுங்கற்பினுக்
கத்தகையுடையளென்றறிந்தியாவர்க்கு
மொத்தனருரைத்திடவுவமையாக்கொளு
முத்தராமீனுடையொருவனுதியா. (௬௫)

உன்னலமேவியவுயர்தவத்தரா
மெண்ணருமுனிவர்களீண்டவெவ்வமில்
கண்ணுறுமணிபலகாலுங்கண்ணகன்
புண்ணியநதிதனிற்புகலத்தோய்ந்தனன். (௬௬)

விடைப்பெயர்த்தேவனல்வேண்டிப்பூசைசெ
யடைக்கவினலடியமர்ந்ததேவனை
யுடைப்பலமலர்கொடங்குய்யப்போற்றியே
யிடைப்படார்நீங்கினனெனினவூர்தியே. (௩எ)

மாதவச்சாலேயுமகிழ்வினுற்றினன்
கோதறுமுனிவருங்குழீஇயினர்கள்வக்
தாதரம்பெருகிடவவரையேற்றனன்
காதலினன்னருங்கருதிச்செப்புவார். (௩அ)

எங்களைக்கருதியவெங்கைதயேயருள்
பொங்கிடவுணர்த்திடிற்பொற்பினன்னதை
யிங்குனதருளினலியற்றுவம்மெனப்
பங்கயனன்றெனப்பணித்தன்மேயினன். (௩௯)

மதிநதிமிலேச்சியமங்கைபங்கனற்
கதிபெறவொருமகங்கருதிச்செய்குவான்
றுதிபுறுநுங்களைத்துணைக்கொண்டேனது
விதியுறமுற்றுவான்விரைமினென்றனன். (௪0)

எழுந்தனரார்த்தனரிலங்குதாமரைச்
செழுந்தவிசுகந்திடுதேவைப்போற்றின
ரழுந்தினர்களிப்பெனுங்கடலிலாணவ
மொழிந்தனருணர்வெனவுளங்கொண்டாரரோ. (௪க)

நாமகள்கணவனுநாகர்தச்சனை
யாமகங்கெடாதநல்லட்டவக்கிரன்
நேமநல்விதிகொடுநிகழ்த்துவாயொரு
தூமகச்சாலையைத்துலங்கவென்றனன். (௪உ)

என்றலும்பணியெனவேற்றுக்கம்மியன்
துன்றியவறிவினுற்றாயமாமுனி
யொன்றியவிதிவழியோகையோங்குற
நன்றுறவியற்றினுறைவெங்கணும். (௪௩)

ஆயிடையணிகலனுடையாதிய
நேயநல்லன்பினர்நெருங்கிவைகிட
மேய்வருதவத்தினரொதுங்குஞ்சாலைகள்
வாய்வுறவிழைத்தனன்வண்மைமேதக. (௪௪)

மாழைபால்கதிர்விடுமணிக்கல்வேதியும்
வாழியகுண்டமும்வயங்குமாடகத்
தாழியும்யூபமுந்தகுதிப்பண்டமும்
நாழியிற்றுயிற்றினனவையினீங்கிட. (௪௫)

ஆனனநான்குடையயன்பின்னருந்
தேனுவையழைத்தனன்றேம்பலற்றிடு
போனகமமைக்கெனப்பொருக்கென்றன்னது
வானகம்விங்குறவழங்கலாயது. (௪௬)

வேறு.

மாதிரப்புலவர்மேருவலம்வருகதிரோன்மற்றைச்
சோதிசேர்கோளுநாளுஞ்சொற்றகிம்புருடர்நாகர்
கோதிலாக்கருடர்யாழோர்கூறுவிஞ்சையரியக்க
ராதியாமமரரெல்லாமார்வமுற்றணுகினரே. (௪௭)

வந்திடுதேவரெல்லாம்வரன்முறையிருக்கைநண்ணத்
தந்தனன்முகமன்சொல்லித்தகுமதுவருக்கம்பின்னர்
புந்திசேர்சுருதிவேள்விபுரையறமுடிதலுன்னித்
தந்தியைதறுகட்சூரைத்தடிந்தருள்கந்தவேளை. (௪௮)

பிறைநுதற்கருங்கட்செவ்வாய்ப்பிராட்டியைப்பூசைநேர்ந்து
மறைமுதற்கிழவனுங்கேமனுட்டிபுக்தானுமாக
விறையருளியாகதிக்கையேற்றனனியம்பநின்ற
துறையறிமுனிவர்தேவர்துதித்தலர்சொரிந்தார்மன்னோ. (௪௯)

அதிரழல்வளர்க்கவட்டவக்கிரமுனிவன்பிர்மா
துதிபுரோமசரத்வர்புதொல்கௌசுதீதகர்தான்
கதியுறுமுற்காதாவாங்கலைமலிவசிட்டனேதா
பொதிமலையருளும்புங்கமுனியுபதிருட்டாவாக. (௫௰)

ஆதிநான்மறையோன்ருத்விக்கவரொடுமமலற்போற்றி
நீதிநல்லாவிர்ப்பாகநெறியுளிதேவர்யார்க்கு
மோதிடக்கொடுத்தான்மற்றுமொழிவிலாயாகம்பல்ல
கோதில்வற்சரமொன்றேடுபன்னென்றுங்குயிற்றிஞல். ()

ஐந்தவித்தாற்றல்சான்றவையர்களவாவடங்கப்
புந்தியாலன்னந்தூசுபொன்னடைக்காய்களாதி
சிந்தியாதெடுத்துப்பல்காழ்தினியணிகலன்களோடு
முந்துபல்லானுங்கன்றுமுவகையினுதவிமற்றும். (ருஉ)

ஏனையோர்தமக்குமீசனெழிற்பிரசாதமீந்தவ்
வூனமில்வேள்விதன்னையுவகையின்முற்றுவிப்ப
வானகவியங்கறங்கவந்தாத்தோசையொன்றைத்
தேனகுமலரோனுற்றுத்தெரிந்தனன்முனிவரோடும். (ருக)

வழுத்துறநானமுற்றிவாழ்மகசாலைபுற்று
வெழுத்தொருவைந்துமுன்னியிறையவன்பாதம்போற்றி
யழுத்தியசிந்தையோடுமமலனைக்காணநின்ரு
தொழத்தகுந்தேவரோடுதோன்றினுனுமையோர்பாகன். ()

ஆணவங்கலங்கியோடவலைத்திடும்பந்தம்வீழத்
தானுவாயுலகுக்கெல்லாந்தனிப்பெருந்தேவனுற்ரு
னேனுறக்காண்டிர்நீவிரெல்விருமென்றுசொல்வி
மானுறுமியங்கறங்கமழவிடைமீதிலுற்ருன். (ருரு)

கண்டனர்கண்களாரக்கண்பனிகசியரோமம்
விண்டனர்போர்ப்பவொன்றும்விண்டிடார்விம்மல்கொண்டு
அண்டருமுனிவரேனையரிபிரமாதியோருந்
தண்டிடாநாமஞ்சாற்றித்தனித்தனிதொழுதற்கானர். (ருசு)

பச்சையோர்பாதியாகப்பவளமோர்பாதியாக
வுச்சிதமலைதானென்றங்குயர்வெள்ளிவரையினின்று
நச்சுறவிழிந்தற்ருகநங்கைபுந்தானுமாக
மெச்சுறவிடையிற்போந்துமேதகவிறங்கினுஞல். (ருஎ)

அ

இறங்கியவிறைவன்மற்றையெழிற்கணநாதர்சூழ
வறந்தனிபுருவமெய்தியடைந்ததுகடுப்பத்தேவர்
மறந்தருமாற்றஞ்செப்பமறையவர்குழாங்கள்போற்ற
பிறங்குறப்பிரமன்பாங்கர்பெருமகிழ்வெய்தவுற்றான். (ருஅ)

அன்னதோர்காலையாங்கணமலனுக்கென்னவிட்ட
பொன்னணியாதனத்திற்புரிந்தெழுந்தருளச்செய்தே
யின்னலெம்பவநோயெல்லாமின்றொடுமவிந்தவென்று
பண்ணிபங்கயனும்பூசைபரிவொடுமாற்றக்கோமான். (ருகூ)

நன்றுநான்முகநீசெய்தநற்றவநன்றுவேள்வி
பொன்றலில்பூசைநன்றுபுகலுதிவிழைவையென்னத்
துன்றுசொல்மனத்துக்கெட்டாத்தூயவனருளலோடு
மின்றனிக்களிப்புத்தூண்டவிறைஞ்சினனிசைக்கலானான். ()

அடியனேன்கயிலைபுற்றங்கருணடம்விழைந்தபோழ்து
படியிலிப்பதியில்வேள்வியாதியபண்பிற்செய்தி [ணங்
துடியிடையுமையோடாங்குத்தோன்றியாம்விருப்பின்வண்
கடிமலர்ப்பாதந்தூக்கிக்களிநடம்புரிதுமென்றே. (கூக)

அருளியபடியேதேவருடனைநோக்கிநாயேன்
றெருளுறுங்காலமென்றோதெரிந்திலனென்னநொந்தேதன்
றிருவருள்வண்மைமீக்குத்திருநடந்திகழச்செய்து
பருவரல்கடிந்தேயாள்கவென்றனன்பதுமமேலோன். (கூஉ)

வேண்டியவேண்டியாங்குவியத்ததுமடியார்க்கிபு
மாண்டகையமலனாண்டேயருட்செவியேற்றாகித்
தாண்டவம்புரியநேர்ந்தான்றனக்குநேரொருவரில்லான்
காண்டகுமுனிவர்வானோர்கடிமலர்சொரிந்தங்கார்த்தார். (கூங)

தண்ணுமைசங்கந்தட்டைசல்லரிதிமிலைகாளங்
கண்ணுடைபூழவமாதிகறங்கிடக்கனகமாரி
விண்ணிடைநின்றும்பெய்யவித்தகர்வீணைதந்த
பண்ணிடைத்தேறல்வெள்ளம்பாவுறப்பாணிதாக்கா. (கூச)

அரசயசயவென்றேதியங்கண்வானத்திலுள்ளார்
காசிரமுகிழ்த்துத்தாந்தாங்களித்தனர்பாடியாடப்
பாதநூல்பணிகொண்டெய்தப்பங்கயன்முதலோர்காணு
வாதனப்பதுமபாதம்வயங்குறக்கோத்தவண்காழ். (கூரு)

வேதநூபுரஞ்சிலம்பவேணியிற்புனருன்கால
வோதுவெண்பிறைதுளும்பியொண்கதிருகளத்திந்தேன்
கோதறுகொன்றைத்தாரேகுழையணிகாதிலூர
மாதொருபங்கிலாடமான்மழுகாத்திற்றுள்ள. (கூகூ)

புலியதளசையநஞ்சம்பொங்குறுமரவம்புல்ல
பலியுறுகபாலமோர்கைப்பாங்குறமற்றோர்கையி
லொலியுறுதமருகந்தானெழிவிலாத்துழனியோங்க
நலிதருவினையைக்கொய்வானுன்முகன்யாகத்தின்கண். (கூஎ)

மறைமுதலனந்தமானமன்னுபல்கலைகளியாவும்
நிறையுறுபூதமாதிநிகழ்பொறிகரணமற்றை
யுறைதருபேதங்காலமுயர்விந்துநாதங்காணு
தறையுறுஞானனந்தனற்புதநடனஞ்செய்தான். (கூஅ)

ஈட்டுதேன்கமலமன்னவிடதுதாளூன்றிமேலே
நீட்டினன்வலதுதாளைநின்மலக்கொழுந்தாயென்று
மாட்டுவானுடநின்றவவையவைவினைகள்வீய
வீட்டுவானின்றவெந்தைவியனடம்புரிதலானுன். (கூகூ)

மதுசொரிமலரின்வீழ்ந்தவண்டினமென்னவுண்மைச்
செதுமறீரறிவானந்தமெனுங்கடல்செறிந்ததேவர்
கதுமெனவெழுந்தவுள்ளங்கசிந்திடக்கவலைநீங்கி
யிதுபெறவிருந்ததென்னென்றிறைவனைப்பழிச்சலோடும். ()

வேறு.

பண்ணின்மொழியைப்பங்கிலுடையா
யண்ணனீயேயறிவாயொளிர்வா
யெண்ணினென்றனெழில்சேர்சிந்தை
புண்ணின்றமருன்னுறவேவுறவு. (எக)

கண்டங்கரியாய்கருதற்கரியா
யண்டர்க்கமுதமானாய்நீயே
தொண்டர்க்கெளியாய்தூரிசின்மனத்திற்
றண்டாதொளிருன்றகவேதகவு. (எ௨)

வானேமுதலாவளரும்பூத
மானாய்நீயேயடியார்க்கூற்றுந்
தேனேதெளியார்சிந்தைக்கெட்டாக்
கோனேகோடியேங்குணமேகுறியே. (எ௩)

என்றேவேதனிறையோன்பாத
மன்றன்மலர்வாய்மன்னிப்பணிய
வொன்றுமுமையோர்பங்கிலுடையா
னன்றேகொண்டுகவிலற்குற்றான். (எ௪)

உற்றிங்கெம்மையோதுந்திறத்திர்
மற்றும்வாழிமல்கவென்றே
பொற்றம்போதிற்புணர்வான்றன்னை
யுற்றங்கென்னையுளமேயென்றான். (எ௫)

அன்னவூர்தியமலன்றன்னை
யுன்னியடங்காவுவகைக்கடலின்
மன்னியெந்தாய்மகிழ்வினீண்டைப்
பன்னுநடனம்பணியப்புரிந்தாய். (எ௬)

ஆற்றல்சேருமதுவேநாமம்
போற்றுமிந்தப்பதியிற்கொண்டே
தோற்றுமடியார்க்கருடானல்கி
யேற்றந்துன்னவெழுவாயிறையே. (எ௭)

என்னமுகநான்குடையான்வேண்டப்
பொன்னஞ்சடையான்புரிந்தப்படியே
யின்னதீரென்றிக்கினீயும்
மன்னியுறைவாய்மலர்மேலுறைவாய். (எ௮)

உளங்கொண்டுன்னுலுஞற்றுமியாக
வளங்கொள்குண்டம்வயங்கும்பிரம
குளமென்றெவருங்கொண்டேகுடையிற்
களங்கவினையைக்கழுவுங்கண்டாய். (எ௯)

ஏற்றுப்பாகனின்னவருள்செய்
தூற்றுக்கொண்டவுருவோனுதி
தேற்றுந்தேவர்தம்மைநீவிர்
போற்றும்வரமென்புகல்வீரென்றான். (அ0)

ஆங்கணமராலரோற்கீந்த
வீங்கும்வரமேவிழைந்தேமெனலுந்
தாங்கும்விடையோன்றலம்வேறிதற்கு
யாங்குங்கண்டேமில்லையொப்பே. (அக)

என்றேபின்னுமருள்வானெழிலா
ரொன்றும்பிரமதீர்த்தத்துற்றே
துன்றுமியாகந்தொடக்கிச்செய்வா
ரென்றும்வாழ்வாரிணையின்முத்தி. (அ௨)

ஆறும்பிறையுமணியுமமல
னீறில்வானோர்க்கிங்ஙனருளித்
தேறுமாவின்றிகழுமடிக்கீழ்க்
கூறிமிலிங்கக்கூற்றின்மறைந்தான். (அ௩)

வேறு.

வாலறிவுடையவள்ளல்வழுத்திடமறைதலோடுங்
கோலமாம்விண்டுவாதிகுணித்திடுமமராங்க
ணேலதம்பெயராற்றீர்த்தமேனுறவமைத்துத்தங்கண்
மூலமாமிடத்திற்புக்கார்முளரியோன்விடையுங்கொண்டே.

இங்ஙனங்கூறக்கேட்டவிருந்தவச்சுகனுந்தந்தை [ன்னைத்
கொங்கலர்மலர்த்தாள்போற்றிக்குனித்தருள்பெருமான்ற
தங்கியவாதரத்தாற்றரிசிக்கவிழைந்தேனென்னப்
பொங்குறவளித்தானங்குப்புகுந்துபல்காலநோற்றான். ()

தனையனைப்போகவிட்டுத்தந்தையாம்வியாதன்பின்னர்
வினையழிமறையோர்க்காசிவிண்டனன்விரைந்துதானுங்
கனைகுரலெழிலிதுஞ்சுங்காமலிதடங்கள்சூழும்
புனையுறுமியாமியத்திற்பொலிபிரயாகையுற்றான். (அகூ)

அழுக்கறுமறைகள்வல்லீரத்தலமகிமையின்னும்
தொழத்தகுந்தசைமைசாலவுள்ளனவவற்றுட்டொல்பேர்
வழுத்துறும்பொதியைவைகிவையகமருளும்வாய்மை
விழுத்தகுமுனிவன்பெற்றவரத்தினைவிள்ளக்கேண்மோ.

வேறு.

என்றருள்சூதனுமென்னுமாதவன்
றன்றனிமலர்ப்பதந்தாங்கிச்சென்னியி
லொன்றியவன்புதானுருகவுள்ளமு
நின்றனரருள்கெனநிகழ்த்தலாயினன். (அஅ)

திருநிருத்தனப்படலம் முற்றும்.

ஆசப்படலம் அ-க்குச்செய்யுள் சஉ0

---



## கூ. அகத்தியர் வரம்பெறு படலம்.

ஓருந்தவமாமுனியோன்கலசத்தில்வந்தோன்
வாருந்தியகொங்கையோர்பங்குடைவள்ளறானு
நிருந்தியவையநெளித்திடநேடுதென்பாற்
பேரும்மெனவேபிரிவாற்றலன்பேர்ந்துபோனன். (க)

அப்போழ்தடல்கொண்டதர்மாயவலைத்துமீப்போம்
வெற்பாகியவிந்தியம்வெள்கிடவேலையங்கைத்
தப்பாதொருதான்றனிச்சிற்றழுந்தாக்கியுண்டோ
னெப்போவெனக்கென்றதையோச்சிபொடுக்கியாங்கன். ()

அஞ்சப்புலனைந்தையும்வென் றவருந்தவத்தோ
னெஞ்சத்தினினின்மலன்றானிநீஇச்சென்று
மஞ்சொரீந்துவளைந்திடுசோலைகண்மன்னியார்ந்த
விஞ்சப்புகழ்சையமெனுங்கிரிமேவினனால். (௩)

அம்மாகிரியாற்றுமருந்தவநீரரியாரும்
பொய்ம்மாயமகற்றியபுங்கவன்றன்னைச்சூழ்ந்தே
யெம்மாதவமாதவமியாங்களிழைத்தவெல்லா
மம்மாபயனுற்றனவுற்றனவென்னவார்த்தார். (௪)

தக்காரவரோடுதொழுவாங்குத்தவத்தினின்று
சக்காரசவிப்பிலனேக்குஞ்சமுக்கிலோனு
மைக்காலளகஞ்செறியில்லவளோடுமன்னி
மிக்காலமிடற்றிறைபூசையின்மேவுநாளின். (௫)

ஓதுந்தமிழ்மாமுனியொண்பணியோம்புவாளங்
கேதும்பலகொண்டனளாகியிறைஞ்சியேகிக்
காதும்படையானலகோம்புங்கவேரமன்னன்
றீதின்மகளாய்த்திகழ்மாநதியாகினளால். (௬)

பற்றொன்றுமிலாதவன்பன்னியிவ்வாறுசெல்ல
வுற்றெம்மைப்பிரிந்திடலென்கொலுரைக்கவென்றான்
மற்றம்முனிகாணகிலான்மறைவாகிவேதன்
சொற்றப்படிபுக்கனள்சூழ்திரைசொல்லின்முன்னே. (௭)

நீலம்புனைவன்னநெடுங்குழனேயநீங்க
வாலம்புனைகண்டனையன்னவருந்தவத்தோன்
சீலம்புனையான்சிலைவேள்விடுசிலீமுகம்பட்
டோலம்புனைவானுரமொல்கியொண்டொடியைக்காணான். ()

வேறு.

பாரங்குன்றமுலைத்திருமானேபணியேனைத்
தீரங்குன்றவிடுத்தனையந்தோகருமந்தேன்
வாரங்குன்றனீதகுமோவெனைவாழ்வித்தாய்
தாரங்குன்றவிருந்தனனென்னதவஞ்செய்தேன். (௯)

அல்லையளக்குங்குழலாயென்னையயல்செய்தாய்
நல்லைநல்லைகாணினியென்கொனவில்கிற்பேன்
வல்லைவந்தேகூடாதொழியின்வாழ்வேனோ
கல்லையன்னாய்காணும்வழியைக்காணேனால். (௪௦)

என்கணான்னாளென்னையிகழ்ந்தேயெறிநீர்வாய்
வன்கண்ணோடுபுகுந்தாளதுவும்வழிதந்த
புன்கண்ணெம்பாற்கண்டும்போவீர்புயல்காணீ
ரென்கண்முன்னைவலியையிப்புமிதமேவ. (௪௧)

வேறு.

இன்னவாபலவியம்பினன்றிரிதருமேல்வை
துன்னுவெவ்வினைத்துரிசினைக்களைந்திடுந்தூய
கன்னியாரல்சூழ்கதிர்மணிக்கோபுரங்களுலு
மன்னுகூடலையாறெனுமாநகர்கண்டான். (௪௨)

கண்டவக்கணங்காமமென்கடுங்கனல்கடிதில்
விண்டநீர்மையாலவிம்மிதமடைந்தனன்வியந்தே
கொண்டமோகமேதணிந்திடக்குறித்திடுமேது
வுண்டுகொல்லிவணென்னெனவுணர்தருகாலை. (௪௩)

உய்த்துநோக்குறுங்குறுமுனிகேளெனவும்பர்
பைத்தபாம்பணிபண்ணவன்பணித்தருள்புரிவான்
மெய்த்தயோசனைமூன்றெனவிவணின்றுமிளிரும்
நத்துசேர்திரிவேணியார்நகரினைக்கண்டாய். (௪௪)

ஆதலாலுனதருந்தவமலைத்திடுகாம
வேதையற்பமேநீங்கினைவிரைந்தனையணுகிப்
போதலுற்றவண்புகலிருசத்திகளோடுங்
காதல்செய்தருள்வோமெமைக்கண்டருள்பெறுவாய். (௪௫)

என்றவாசகம்வானிடைநின்றெழுந்திடலுந்
தென்றலைக்கலையருந்தவன்றிருவருணினைந்தே
யொன்றவத்தலங்குணக்கதென்றுணர்ந்தனன்குறுகிச்
சென்றுபுக்கனன்சேதனமீக்குறச்சிறந்தே. (௪௬)

அணைந்தருந் திரிவேணியிலயன்பெயர்க்குண்ட
மணந்தருந்தனிதீர்த்தத்துமல்குசங்கற்பங்
குணந்தரும்படிபுரிந்தனன்புரிந்தபின்குறித்த
வணந்தருஞ்செயலியாவையும்வாய்வுறமுடித்தே. (கஎ)

நிருத்தனப்பெயர்நிமலனதாலயநெருங்கி
யருத்தநூற்படியருச்சனையாதியவாற்றிக்
கருத்தவிந்திடக்கட்கடையருளொடுங்கலந்தே
வருத்தநீங்கினன்வழுத்துவான்வண்மலர்ப்பதமே. (கஅ)

வேறு.

வானேமுதலாய்வயங்கும்பூதந்
தானேயானாய்தமியேன்சரண
மூனேமிக்காமுயிர்க்கணருள்செய்
கோனேயானாய்குணமேசரணம். [கசு]

குடிலைநீயேகுலவும்ஞானப்
படிவநீயேபழியேன்சரணம்
நடலைவல்லேனுயேன்வினையின்
றிடரையகழ்வாய்தெருளேசரணம். [உ0]

வேறு.

இவ்வகையன்புசெய்தங்கேத்துறுமெல்லையெஞ்சு
மைவருமிடற்றுப்புத்தேள்மாதொடுதோற்றியாங்கண்
மெய்வழிதவமதாற்றுமேதகுகுணத்தினுய்கே
ளெவ்வரமெனினுமீதுமிசைத்தனைகோடியென்றான். (உக)

இறையருளிருந்தவண்ணமிருங்கடலுண்டவள்ளல்
முறையுறவுணர்ந்தேயெந்தாய்முடிவிலாவிரகமென்னு
நிறையுறுதாபமீங்கணீங்கிடப்பெற்றேனினறன்
மறைமுடிவதுவுந்தேருமலர்ப்பதம்வாய்க்கப்பெற்றேன்.

என்னினியடியேன்வேண்டவிருந்ததிப்பாரிலெங்கு
முன்னயெற்குபதேசித்தமூரிமுத்தமிழென்றேதுந்
தன்னிகர்கலைதானேங்கத்தண்ணருள்புரிதிமற்று
மன்னுமென்சிந்தைநின்றன்மலர்க்கழன்மருமைவேண்டும்.

மற்றெதும்வேண்டேனென்றுமகிழ்வொடுபோற்றலோடு
முற்றவர்குறையைநீக்குமுமையொருபாகத்தண்ணல்
நற்றவகேட்டியிந்தநானிலந்தன்னில்யாமு
முற்றவத்தமிழின்சிர்மையுலவிடக்கொண்டதுண்டால். (உச)

ஆனதாலியாமுமற்றைப்பயனலைவண்ணமீண்டு
மூனமிலுருவமெய்தியுலகினிலுயர்வாகீசன்
மானவர்வழுத்துநாவலூரனேமாணிக்கஞ்சே
ரீனமில்வாசகத்தோனெனவருநாமம்பூண்டே. (உரு)

அவனியின்மறைகண்முற்றுமருந்தமிழ்ப்பிரபந்தம்மா
பவமறவருளியெங்கும்பரவுறச்செய்வோமென்று
தவமுறுமபொதியைவாழுந்தாவறுமுனிவற்கோதி
யுவமையிலெந்தைபின்னுமுறுதியையுணர்த்தலானன். (உசு)

நீயெமைவழுத்திப்போந்தநெறிமலிபனுவறன்னை
வாய்மையினினிமையோடுவழுத்திடவல்லராகிற்
காயமதழுதுநாளுங்கதிர்மணிச்சோதியென்னுந்
தூயநம்பதவியுற்றுத்தொடர்வினைகொய்வரன்றே. (உஎ)

வேறு-

வேதமுந்துணிகிலாவித்தகன்னிவை
யாதரம்பெருகிடவருள்செய்தவ்விடை
நீதமார்தன்னுருக்கரந்துநீங்கியே
யோதிடப்போயினனுயர்விசும்பரோ. [உஅ]

ஆக்கியவ்வுலகினைபளித்தழித்திடும்
போக்கொடுவரவிலாப்புனிதன்போயபின்
றூக்கருமகத்தியன்றுனுவைநினைந்
தூக்கியவற்சரமொன்றங்குற்றனன். [உகூ]

அத்தகையருந்தவனுண்டிருந்தொரீஇ
மைத்தகப்படிந்திடுமலையத்திற்புகா
வொத்ததம்மாணவர்க்குணர்த்தியொண்டமிழ்
வித்தகமுலகிடைவிங்கச்செய்தனன். (௩௦)

தெருமரனீக்குறுந்தேவன்றந்தரு
ளொருவரங்கொண்டுலகுயிரினேம்புறு
மருமருந்தன்னதாமணிகொள்வான்றமிழ்
பெருவரம்பிடைநனிபெருகலாயதே. (௬௧

மன்னியவன்னதுபறைக்கத்தக்கது
துன்னியவுமக்கியாந்தொகுத்துக்கூறினும்
பின்னதுமுணர்த்துதும்பெட்பிற்கேண்மினென்
றின்னயச்சூதனுமிசைத்துளானரோ. (௬௨)

அகத்தியர் வரம்பெறுபடலம் முற்றும்.

ஆகப்படலம் ௯-க்குச் செய்யுள் ௪௱௨.



# ௰. காத்தியாயனர் வரம்பெறுபடலம்.



வழுத்துறுமுனிவகேண்மோவம்பவிழ்சோலைசூழுந்
தொழத்தகுங்குடிஞைசேருந்தொல்பதியதனினெல்லை
யிழுக்கறுமாசைநான்கிலியம்புகேத்திரமுமெங்கட்
கொழுக்கமிக்குடையாயின்னேயுரைத்தருள்புரிதியென்றார். (௧)

வினவியமுனிவர்தம்மைவிழுத்தவச்சூதனிங்கு
மனவியல்படங்கவல்லமாதவத்தொழுகவல்லீர்
கனமலிகுழலிபங்கன்கமலநான்முகற்குமுன்னஞ்
சொனமுறையுமக்கியாமுஞ்சொல்லுதுங்கேட்டிரென்றே. (௨)

அத்தலவகலநீளமாசறவொவ்வொன்றுக்கு
மொத்தயோசனைதான்மூன்றென்றுரைத்திடல்சரதமாகுஞ்
சுத்தமாங்குணக்கிற்றில்லைசொல்முதுகுன்றமேற்கி
லுத்தரயாமியத்திலோங்குகோகிரிதுவாரை (௩)

கொழுந்துறுசோலைமாடக்குவடுகள்குலவப்பெற்றச்
செழுந்திருவகலாவந்தச்சீர்மைசால்பதியினெல்லை
தொழுந்தகுவரைப்பினுள்ளாற்றெறுகையிடற்கரியவான
அழுந்துறுமலநீக்கியறம்பலவளிக்குங்கண்டீர். (௪)

களித்திடுகாமமாதிகடிந்தகாத்தியாயனப்பே
ரளித்திடுதவத்தோனங்கேயமிழ்தொடுபிறந்தாடன்னைத்
துளித்திடுமன்பாலின்றேதுணர்த்துழாய்மௌலியோங்கு
கெளித்திடுமரவிற்றுஞ்சுநெடியவற்களித்தான்மாதோ. (ரு)

பின்னும்போதாயனப்பேர்ப்பெருந்தகைமுதலோரெல்லாம்
பன்னருந்தவங்களாற்றிப்பரிந்தனபெற்றங்குய்ந்தா
ரென்னனுமுனிவராங்கேயேத்துறுங்கமலைதன்னை
நன்னுதன்மகளாவின்றுநாரணற்களித்தோன்காதை. (சு)

ஒழிவறவுருடியென்றங்குரைத்திடுமுனிவரெல்லாம்
பொழிதருமமுதமென்னப்புணர்செவிமடுக்கச்சொல்வான்
கழிவருதவத்தினெல்லைகண்டிவன்கத்தியப்பேர்
மொழிதருமுனிவனுக்கேமுளைத்திடுமுதியோனன். (எ)

காத்தியாயனனுமந்தக்காய்சினங்கடிந்தோன்காணுஞ்
சீர்த்தியானென்னும்போதாயனன்றனைச்சிவணிச்சீல
மாத்திடக்கலைகள்கற்றேயருஞ்சகபடிகளோடும்
பேர்த்திடாவன்புமல்கப்பிணைப்புறீஇயிருக்குங்காலை. (அ)

வேறு.

அருந்தவக்குரவனறைமொழிகேளா
திருந்தனனுகவுமெரிபுரையுரையா
லாரந்தனைவிட்டென்னெஞ்கலையாவுந்
துரந்தனையாகெனத்தூயவன்சொன்னான். (கூ)

மற்றதுதாங்காமனதொடுமறையோ
னுற்றிடுபோதவுணர்வினைநீங்கிச்
சுற்றுறுகதிரோன்சொல்வழிநில்லா
முற்றியவறிவின்முன்னவனானன். (க0)

ஒன்னுதன்மங்கையரோகையொரீஇயக்
கன்னுவசுக்கிலயசுர்மறைகற்றுத்
தன்னுறைமூன்றுதருக்கியகூடம்
வின்னுறைமாடவிபன்பதிகண்ணி. (கக)

எற்படுகாலையெரிகதிர்முன்பே
கற்படநூறிக்கடிதினினொழுகு
முற்படுநதியின்மூழ்குறவமையத்
தற்பரனருள்சேர்தாவறுமுனிவோர். (கஉ)

ஆற்றெதிர்பேணியறற்படவாட
னீற்றொளிமேனியநீநயவாமைக்
கேற்றுறுமேதையெமக்குரையெனலும்
போற்றுறுமன்னான்புகலுதலானான். (கங)

புலந்தருசெல்வப்பொருட்கலையீந்தோன்
வலந்தருகதிரோனாதலின்வல்லீர்
நிலந்தருமுலகினீணதியிங்ஙன்
குலந்தரவாடியகொண்டனன்கண்டீர். (கச)

என்றனனாகியெழிற்றிரிவேணி
நன்றினைவெஃகனலிந்திடவீத
லொன்றினையாயினோதுறுமென்மு
னின்றினையேயெனவேகுதியென்றான். (கரு)

அம்முனிசோளையறிந்திடுமவ்வா
றிம்மெனுமுன்னமெதிருறமேக்கிற்
செம்மையினூர்தரச்செல்கதிமுன்னி
விம்மிடவுள்ளம்விரைந்தனராங்கே. (கசு)

உகாத்திமிரம்படவோங்கல்வளைஇய
செகாக்கதிரோடணிசிந்துவைநோக்கி
நகாத்தனிமூன்றொடுநல்குறுமுக்கால்
பகாக்கணியேல்வைபணிந்தனன்மூழ்கி. (கஎ)

உள்ளுறுதங்குலமுற்றவருய்வா
னெள்ளெடுநீரையிரைத்தனனாகப்
பொள்ளமிலன்பொடுபூசுரர்யாரு
மள்ளியவந்நதிபாடினரம்ம. (கஅ)

பின்னுமருந்தவபெற்றியனந்தத்
துன்னுநடம்புரிதோகையொர்பாகன்
சன்னிதிபோந்தருள்சங்கரசம்பு
வென்னவினைதஞ்சுறுமேல்வையினுங்கே. (கசு)

மாழையிளங்கதிர்மாமதிசூடிப்
பீழையகற்றிடுபிஞ்ஞகன்றோன்றி
கோழையறுத்திடுகூர்தவகேணி
யூழைமுறுக்கியவோள்வரமென்றான். (உ௦)

கோவருமுத்தொழில்குலவகடாத்துந்
தேவர்கடேவன்றிருமுனமாண்டு
மேவருநின்பதமேவுறுமன்பு
மோவருமெங்குலமோம்புறுசெயும். (உக)

புலமிசைபோகார்புந்தியின்வைகுஞ்
சலமிசையோடியசார்சடிலத்தோய்
மலர்மிசைவைகுமம்மாதினையகவாய்
நிலமிசையெற்குறநீடருள்செய்வாய். (உஉ)

வேறு.

என்றேயிழிகறவவெம்பெருமான்றாட்பதும
மன்றேமுடிக்கணிந்தானஞ்சலியாகிற்புழிமான்
கன்றேகாமுடையகண்ணுதலெப்பெருமானு
நன்றேவரமூன்றுநல்கியவண்மறைந்தானால். (உங)

பின்னும்பெருமகிழ்வின்பீடுபெறமத்தலத்தின்
மன்னுந்தவமுடையான்மறைநெறியினிட்டிபல
துன்னும்படிபுரிந்தேதோன்றிடக்கன்னுமந்நேச
ருன்னும்பவங்கழுவுமோர்தீர்த்தமுளதாக்கி. (உச)

இட்டவரமருளுமெழிலிலிங்கதாபனஞ்செய்
தட்டியிலாவன்பினுண்டேமூன்றங்குறைவான்
தட்டியுரைபகராத்தன்மனைவிபுத்திரனை
மட்டில்மனக்களிப்பின்மாண்புறவேயின்றனளால் .(உரு)

ஈன்றவருங்குழவிக்கெல்லாமெழிலுறவே
யான்றவருள்கலந்தங்காற்றியருள்வழியோர்
மான்றவிருங்கண்ணின்மகட்பெறுவான்மைகுழலோ
டேன்றவிசைவினோடுமெண்ணியிருந்தனனங்கே. (௨௬)

ஆக்கந்தவமென்பிரலைசூழுமேழுலதுண்
டேக்கங்கிளைத்திடமற்றமிழ்ந்தருளுமொருவன்றன்
மோக்குபணமன்றன்முட்டாநற்சீரெல்லாந்
தூக்கியுரைப்பமினித்துகடீரக்கேண்மின்காள். (௨௭)

காத்தியாயனர் வரம்பெறுபடலம் முற்றும்.
ஆகப்படலம் ௧௦க்குச் செய்யுள் ௪௭௯.



# ௧௧. திருமால் திருமணம்புரி படலம்.



கருமாறுபிறப்பொருவுங்கதியளிக்குங்கமலமெனுங்கண்ணன்முன்னை
விரிவாயகடலழுந்துமுலகினைமீளவுங்கொணரவிரைவினேன
வுருவாகிப்பாதாளத்துற்றிடுநாளுசனைத்துமொருங்கேயீன்ற
திருவாகுமவள்விலகித்திரிவேணிகூடுமிடந்தேடியாங்கோர். (௧)

வண்டோடிமதுநுகரும்வண்டோட்டுக்கமலமிசைவைசப்பெற்றுத்
தண்டோடுசமண்டலங்கொடகுங்காத்தியாயனப்பேர்த்தக்கோனுக்குக்
கண்டோடிவந்தெடுக்குங்காலமதையுறநோக்கிக்கருணைபொங்கி
விண்டோர்களுளங்களிக்கவியன்குழவிவடிவாகிவிளங்கினளால். (௨)

பாமணக்கும்விதிவழுவான்பகருற்றவைம்புலமாம்பகையைவென்ற
நாமணக்கும்புகழுடையநற்றவனும்பிரிக்கடனைநல்கவேண்டித்
தேமணக்கும்பொழின்மல்குதிரிவேணிகூடுமிடந்திகழப்புக்கான்
பூமணக்குந்திருமகவைப்புகழுமிருகண்கொண்டுபொருந்தநோக்கி. (௩)

அண்டர்களுமருந்தவருமாகுலமொன்றுற்றக்காலடைந்துபோற்றும்
பண்டுடைப்பாற்கடலிற்பணமாரும்பாப்பணைமேல்பரிந்துதூங்குங்
கொண்டலுடைமணிமார்பிற்குலவியெழுந்தடியார்கள்குறையைநீக்கும்
புண்டரிகைதனையெடுத்துப்போற்றிமுகந்தனில்மோந்தான்புகழேபூண்பான்

சிந்தைகுளிர்முனிவரகேளிதையென்றுகாசஞ்செறியுந்தெய்வம்
சொந்தனைமுன்றவமுயன்றநோன்மையினலிவளுனக்குநொய்தினிங்கு
வந்தொருமாமரைமலரிற்குழந்தையுருக்கொண்டிகுவயங்கலுற்றாள்
முந்தைவினைதீர்த்தனைமற்றறிதியுனைநிகர்ப்பவரார்மொழிதற்கில்லை. (௫)

என்றுரைத்தவாசகத்தினிரும்பொருளையினிதினனியேன்றுகொண்டு
துன்றமத்தியானவிதிதோமறவேமுடித்தனனுய்த்துநீங்கா
வன்றரியமருந்தென்னும்பெண்மகவையருமார்பிலணைத்துபாநீங்க
வொன்றமறைச்சடங்கெல்லாமோவாமலாற்றினன்மற்றோர்ந்துநாமம். (௬

அம்புயத்தில்வளர்ந்ததனுலம்புயமாம்வல்லியெனவணிந்துபோற்ற
விம்பரினிலிருளொதுக்குமிகலுடையானிடங்கலைகளெல்லாங்கற்றுக்
சம்பமெனத்தவம்புரிவோன்காத்திடுநாள்கட்டழுகுகனிந்துநாளு
மும்பரினிலோவியம்போலொளிவிளங்கவளர்ந்திட்டாளுலகமீன்றாள். (௭)

வேறு

அன்னகாலையருந்தவரியாவருந்
துன்னுமேகந்துணைசொலுமேனியோன்
பொன்னைவெவ்வணமீட்டுப்புணர்ந்தன
னென்னலோடுமியம்புவன்சூதனே. (அ)

நின்றமாநிலம்நீடலையாழ்கிடப்
பன்றியாகிப்பதுமனையின்றவ
னென்றதன்றெருநகோட்டினிலொட்டிய
துன்றுதூசெனத்தூக்கியெடுத்தனன். (௯)

சில்லிகைபெறுஞ்செய்தவர்வைகிய
பல்லிகைமுதலெல்லவுமன்னிய
வெல்லிகைநுழைபாதவிருங்கடம்
புல்லிக்கைதொழப்போந்துவிளங்கினன் (௧0)

அன்னகானத்தணியினைக்கண்டனு
முன்னுமானந்தமூண்டதிகேழனுந்
தன்னகண்களிற்றுங்குமிருதுளி
மன்னவிழ்ந்தனமண்ணிடைபாங்கரோ. (௧௧

ஈரமல்குமிருதுளி தன்னிலொன்
றாருதீர்த்தமெனப்பெயரோங்கிய
பேரநின்றதும்பிப்பலத்தாருவாய்ச்
சாரநின்றதுசாகரவையமே. (கஉ)

தாங்குமாநிலந்தாங்குவராகனு
மாங்கணுற்றவருநீர்ப்படிந்தெழா
வோங்குதோயமிதுதனையொப்பது
யாங்குமில்லையென்றே யருள்செய்துபின். (கங)

வாய்ந்ததீர்த்தம்வளர்சிரமந்தனை
மாய்ந்தவாக்கலின்மண்ணினிவியாவர்க்கு
மேய்ந்தவெஞ்சிரமப்பரிகாரியென்
றுய்ந்தநூலரறைகவென்றனரோ. (கச)

வானைமுட்டியவோங்குறுவஞ்சினை
யீனநீக்குறவேன்றபணைமரந்
தானமேவினர்தாந்தம்விரும்பிய
வானயாவையுமாங்கணளிக்குமால். (கரு)

வேறு

மருவணியுந்துளபமணிமார்பனின்ன
வழுத்தினனய்மாமறையோர்வழுத்துகின்ற
வுருவணியுமணிகொழிக்குமலைகள்கூடு
மொப்புயர்வொன்றில்லாமலோங்கப்பெற்ற
கருவணியும்பிறப்பழிக்கும்பதியிலேகிக்
கண்ணுதலைக்கருத்தகத்துக்கருதியாங்கண்
திருவணியும்பரிவினனய்ப்போற்றலோடுந்
தேவதேவனுமெழுந்தேதிகழக்கூறும். (கசு)

அலைகடலிலாயிரவாயனந்தன்மீதி
லறிதுயுலினமர்வோய்கேளர்வமேவித்
தலைமையுறுமிந்நகரிலெம்மைப்போற்றுந்
தகுதிதனையாமுணர்தோந்தரணிகாப்போய்
கலைமையுறுமிதன்குடக்கில்வசிக்கினீயே
கருதியவாதிருமகளைக்கமழுமார்பி
னிலைமையுறப்பெறுவையெனநிகழ்த்திப்புக்கா
னெடுமறையுங்காணுதநிமலன்மாதோ (கஎ)

இட்டமுடனியலுமையாள்பாகன்சொல்லி
யினிதருளும்வாய்மைதனையெழிலிமேனி
மட்டவிழுந்துழாயலங்கன்மார்பிலாடு
மன்னுவராகப்பெருமான்மதிக்குஞ்சில்லி
யிட்டசித்தியளித்துயருங்கடற்றினுப்ப
ணியலாருந்திருமுட்டத்தேகியாங்கே
வட்டமுறுசிரமபரிகாரிதீர்த்தம்
வயங்குகின்றபச்சிமத்தில்வயங்கிமன்னோ. (கஅ)

ஆரணனைநாபியினின்றளித்தகோமா
னகிலமுதலெவ்வுலகுங்காக்கநின்ற
வாரணந்தானுதியெனவருந்திக்கூவ
வந்தங்கேவாழ்கவெனும்வண்மைமிக்க
போரணவுஞ்சக்கரத்தோனியார்க்குமேலாம்
புகலானபூந்துளவக்கண்ணிமாயன்
முரணவுங்கொன்றையணிவேணியானைத்
தன்னிதயத்தாமரையிற்றரிக்கலானன். (கக)

அடியார்க்கங்கடியானுயமர்ந்தசீமா
னூர்த்தியொடுமரன்தன்னைப்பணிதலோடுங்
கடியாருமலர்மிசையாள்காத்தியாயக்
கரிசில்லோன்கண்டெடுத்தகமலவல்லி
படியார்ந்தவச்சரசிற்றீர்த்தமாடிப்
பங்கயத்தால்பரிவினொடுபறவையூருங்
கொடியானையாழியங்கைக்கோனைப்பூசை
குயிற்றினளங்ககங்குழையக்குலவிமன்னோ. (உ0)

நவ்வியனவிழியுடையகளினமாது
நந்தாதகால்வேதப்பேழைக்குள்ளே
திவ்வியமாயொளிர்மணியைத்தேடினளாய்த்
திரியாமல்மனதடக்கித்திணிகொளந்த
வெவ்வியவெல்லாம்போக்கும்போதிநீழல்
வியன்றவங்கொண்டினிதிருக்கவேலைதன்னி
லவ்வியமதலையாவற்காக்குங்கண்ண
னரன்பணியாலவட்குறுகியறைகுவானே, (உக)

பேதாயுன்னருந்தவத்தைப்பேணினுமுன்
பின்ருதவிழைவென்னபெறுகவின்னே
போதாருங்கோகிலமேபுகலுகென்னப்
புண்ணியனேபுவியளந்தமூர்த்தியேநின்
பாதாரவிந்தம்மேபணிந்தேனீயென்
பதியாகவேண்டினெனென்மன்பணியிடுதன்ன
வாதாரவுலகத்துக்காதாரந்தா
னவனுனவன்கொண்டானகத்திலன்றே. (உ௨)

வேறு.

மாகமங்கலதுந்துபியாதிய
சாகரம்மெனச்சார்ந்துதுவைத்திட
வோகைமுந்தியவும்பர்களேமுத
லாகரம்மனிலங்கொளருந்தவர். (உ௩)

அங்கைகொண்டலர்மாமழைபெய்தனர்
கொங்கலர்குழற்கோதையர்பாடினர்
சங்கமாநிதியாதியகொண்டனர்
புங்கவேதியர்பொன்மனப்பந்தரில். (உ௪)

பாலவார்கடற்பைங்கொடிதன்னையே
நீலவார்கடலன்னநிறத்தவன்
கோலமாகுமுருக்கொடுகூர்மண
மாலைசூடினன்மங்கலநாணெடே. (உ௫)

சாத்திரச்சடங்கெல்லவுஞ்சாய்வறக்
கோத்தியற்றியகோதிலருந்தவக்
காத்தியாயனனுதியர்கைகுவித்
தேத்திப்போயினரெண்ணிலரீண்டியே. (உ௬)

எண்ணுமாதவனெந்தத்தவத்தினிற்
பண்ணுலாமொழிப்பங்கயவல்லியை
நண்ணினனதுநல்லசீமுட்டமென்
றெண்ணநின்றதுவேறுந்தவத்தரே. (உ௭)

கூடலைப்பதிக்கோனருள்கொண்டனன்
வீடணற்கருள்வித்தகன்விமிசை
யாடகத்தினடன்னையருமணத்
தோடகத்தணிதோன்றவணிந்தனன். (உஅ)

அன்னதாலத்திரிவேணியைநிகர்
மன்னுமோர்பதிமண்டலத்தில்லையால்
பன்னுமப்பதிமான்மியம்பன்னினர்
துன்னுசெல்வந்துலங்கப்பெறுவரால். (உகூ)

அறிவனின்னணங்கூறியருளமே
லுறுவவோருமுணர்வின்முனிக்குழாம்
பெறுவதுண்டினும்பேணினைகூறென
நெறிவயின்னதுநேரநிகழ்த்துவார். (௩0)

திருமால் திருமணம்புரிபடலம் முற்றும்,
ஆகப்படலம் கக-க்குச் செய்யுள். ௫0௧.

---

# கஉ. தீர்த்தமகிமைப் படலம்.

எழுதற்றகூடுமலையின்பதிக்கணியல்கின்றதீர்த்தவியல்பும்
பழுதற்றமேவுபலனும்பறைந்துபணிபற்றியாடியெனவே
தொழுதற்றசொல்லுமுனிவோருளங்கொடுரிசற்றிலங்கவயனோர்
முழுதற்றவாய்மைமொழிசூதனென்னுமுனிவோனுமுன்னிமொழிவான். (க)

தண்டாதகோதியளிபூணருந்துதலையாகுதீர்த்தமெவையுங்
கண்டோதவல்லரெவரேனுமில்லைகதியாரநல்குதிறனர்
பண்டாமவற்றுள்சிலவாம்வளங்கள்பதியுற்றமூழ்கிலுளவாம்
விண்டாவலுற்றபயனோடுரைத்தும்விளியாதகேண்மினினிதே. (உ)

பர்நித்தநீயவினைவெல்லவல்லபகருற்றவேணியுடனே
யர்நித்தம்மேனியரனூர்திராமமறிவுற்றகுண்டமயனூர்
சிந்தித்தபாணிசெறிவுற்றவிந்த்ரசிதஞ்சிவத்திறுருவை
வந்தித்தரும்பமுனிகாத்தியாயனெனும்வண்மையாளருதகம். (௩)

ஓதத்தினெல்லையுலகத்தின்மிக்கவுயர்வுற்றசீர்கொள்பதியின்
மாதுற்றதீர்த்தமிவையாதியன்னமணமுற்றபெற்றியறைவாங்
காதுற்றவைந்துபொறிசெற்றுமேவுகரிசற்றசிந்தையுடைய
வேதத்தினெல்லையுணருந்தவத்திர்விழைவுற்றுகேண்மினெனவே. (ச)

## வேறு.

முப்புரிவேணிதீர்த்தமாமகிமைமுன்பியாமுரைத்தனமெனினுஞ்
செப்புறவின்னுமன்னதின்சீர்த்திதுணிந்தனஞ்சேகுறுமதுதா
னிப்புவியதனில்வளம்பலசுரக்குமெழிலுறுமங்காடாள்வா
னெப்பிலாவலத்தானும்பரும்வியக்குமுயர்தினகரனெனுநாமன் (ரு)

கனகமாப்புரிசைசூழ்ந்தொளிவிளங்குங்கனகமாப்புரிதனின்மகிழ்ந்தே
யனகனுமரனைப்பணிந்தனுதினமுமாருயிரனைத்தையுந்தமபோல்
மனகமலத்தின்மதித்தனன்மாண்பார்மனுதருநூல்வழிச்செங்கோல்
சினகதநீக்கிச்செலுத்திடுநாளிற்செப்புறுதேவசன்மாப்பேர். (௬)

மறையவர்குலத்துமானவன்றன்னைமன்னுயிர்நட்பினனுக்கிக்
கறைதவிருளத்திற்கொண்டனனகக்கடையெனுமெவற்றினுங்கடையென்
றறைதருமழுக்காறகத்தினிலூன்றியாங்குளாரவர்தமைப்பிரிக்கத்
துறைதனைநாடித்தோன்றுருதடக்கித்தொன்மைபோலரசவைபுகுவார். (எ)

இன்னணநாட்களேகுழியொருநாளிறைஞ்சலர்மணிமுடிதுணிக்குங்
கன்னவிறேளனேருழைதனித்துக்கரிசறுமனத்தொடுமவிர
துன்னியேசூரனெனுமொருவமைச்சன்றேன்றலேதுணிகலேனெஞ்ச
முன்னியேயுரைக்கவென்றனனென்னையுரைமதியஞ்சலையென்றான். (அ)

கோதிலாதவிருங்குலத்தினில்வந்தகொற்றவாகுறுநெறிபிடித்த
வேதியனின்பால்விழைவினைக்காட்டிவிண்டிடாநட்பினைக்கொண்டா
னுதலாற்பட்டத்தரியநின்றேவீயறிவினைக்கலக்கினனஞ்சாக்
காதலாற்புணர்ந்தானென்றனன்பாவக்கடல்வருநஞ்சமேயனையான். (௯)

துன்மதியமைச்சன்சொல்லியசொல்லாஞ்சுடுசரஞ்செவிவழிபுகுமுன்
மன்மதியென்னுமணிமதிலுடைந்தமாண்பிலாச்சினமெனுஞ்செந்தீ
தன்மதிப்புடையவவன்றனிப்பொறையாந்தாவரும்புணரியைக்குடித்துக்
கன்மதித்தன்னவஞ்சிடாநெஞ்சைக்கருக்கினகடிவரையம்ம. (௧௦)

மானமேயன்றிமண்ணிடைமாந்தர்மதித்திடப்பட்டதோர்பொருடா
னதுவேறுகண்டிலனென்னேயழிந்தனவென்பெருங்கீர்த்தி
யூனமேசுமந்தவுடலினிப்பொறையேயுயிரிதிற்பெரியதோவுணரி
னீனமாமவரையிறப்பவென்றந்தோவெழுந்தனனெண்ணமிலிறைவன். (கக)

நட்பெனவோராணமேபூண்டுநெஞ்சினுங்கொடியதாஞ்சீற்ற
முட்பொதிந்தழலருணர்வதுமாய்ந்தவொருவழியிருந்திலனந்தோ
கட்பொறிகாலக்கடுமொழிகூறிக்கரிசறுவேதியன்றன்னைத்
திட்பமார்நீவிர்கொணர்மினேயென்றான்றேடியகாலனிற்சென்றார். (கஉ)

மனத்தினுங்கடியவொற்றர்களங்குமறையவனில்விடைப்புக்கு
நினைப்பினானும்மைவிளித்திடங்சொற்றனோலர்வலந்தனதாக்கு
மினத்தினாற்பெரியவெங்கடம்மிறையோனென்றனருரைதனையெண்ணு
மனத்தினாற்றுயன்சென்றனனுடனேமன்னனுமவன்தனைப்பாரான் (கங)

கோவியலழியக்கொற்றவன்றனக்கொடியவனிழைத்திடுகோளாற்
றீவினைவயத்திற்பட்டனனாகித்தெய்வநான்மறைதனையோர்ந்து
நாவினாலுரைக்குமந்தணனோடுநளினமேலொருத்தியைநிகர்தன்
றேவியைப்புரிமின்கொலையெனச்சொற்றான்றிரித்தனருடறனைத்தீயோர். (கச)

பழிதனைப்பூண்டபார்த்திபன்றானும்பகர்தருநட்பினைப்பூண்ட
விழிவிலாவந்தணன்றன்னையியம்புறுகற்பினுக்கணியை
யொழிவிலாச்சினத்தாலுறுத்தனன்கொன்றானுய்விவற்குண்டுகொலொல்லை
கழிவிலவத்திருழ்ந்தனவிருபாற்காய்ந்திடுகொள்ளியைக்கடுத்தான். (கரு)

சேர்ந்தவைக்கொல்லுஞ்செறிதழலம்மசினமெனுமழல்கொளப்பட்டா
ரார்ந்ததொல்லினமுமவிர்ந்திடக்கொளுவியவருமைச்செல்வமும்பொன்றி
வாய்ந்திடச்செய்தபுண்ணியமனைத்தும்வறந்திடப்படுப்பதுமல்லா
லோய்ந்திடாநிரயத்துட்கிடந்தழல்வரோவதையுன்னலுந்தகுமோ. (கசு)

ஒள்ளியரெனினுமவருரைதம்மிலொண்பொருள்காண்பதேயறிவா
மெள்ளுறுமமைச்சன்வாய்மொழியெண்ணானிழிபழிசுமந்தனன்பாவங்
கள்ளிகொள்கானிற்கடுகினனில்வான்கண்டலர்பழித்திடவலைவா
னள்ளிகொளலைதான்கூடுறுமாற்றையடைந்ததிற்படிந்தெழுந்தனனால். (கஎ)

தன்னையுமுணர்ந்தான்றனையகலாமற்ருக்கியகொலேப்பவஞ்சூழ்ந்து
மன்னியவவைதான்விலகியமாண்புமன்னவன்கண்டனன்மாழ்கி
யென்னைகொல்பாவமிழைத்தனனினியானென்செயவல்லவனென்றே
யுன்னியகோன்பினெண்டவரிருக்கையோகையிற்சென்றனனுலேந்தே. (கஅ)

ஆவிதானுண்டோவிலேகொலோவென்னுமரசனையார்வமாயழைத்து
மேவினையாவனென்றனராங்கண்மேவியதவத்தினரவனுந்
தீவினைக்கொருவனென்னலாமடியேன்றிரைகடற்புவியெலாமலேந்தேன்
கோவினையுடையேனிவனுறவெனதுகொலேப்பவமொழிந்தனகண்டீர் (கக)

இத்தலமுற்றமாண்பெலாநாயேனிருசெவிக்கமுதெனக்கேட்கும்
பொத்தியவன்பிற்புகுந்தனனுமதுபுரைதவிர்சாலேயிலெனலுஞ்
சத்தியாவினத்தணரிரங்கிச்சாற்றினர்தலத்தெழிலெல்லாம்
நத்தியவவனுநன்றெனக்கொண்டுநம்பனற்சினகாம்புகுந்தே. (உ0)

விதிவழுவாமல்வெண்டலேப்பலிகொள்விண்ணவன்றனைநனிபோற்றிக்
கதிதருமன்னையிருவரைப்பணிந்துகனகவிமானமண்டபம்பல்
நிதிகொடுவியற்றிச்சாரூடுதீர்த்தநிகழ்த்தனனுண்டுமூன்றிருந்தான்
றுதிபெறுகடகத்திங்களினமையிற்ருேகையோர்பாகனுந்தோன்றி (உக)

அன்பநீசெய்தபணிதனைவியந்தோமளிக்குதும்வேண்டுவதெவன்கொ
லின்புறவுரைத்தியென்றலுமரசனேழைமுற்பவமெலாந்தொலேத்துப்
பொன்பதித்தன்னநின்றிருமேனிப்பொலிவையுங்கண்களாற்கண்டேன்
தென்களிகூருநினதுதாண்மறவாத்திறலினிதளித்தருளென்ருன். (உஉ)

எண்ணியவெல்லாமடியவர்க்கீயுமிறையவன்றிருச்செவியேற்று
நண்ணியநினதுநகரினிலினிதேநாட்பலவரசினையோம்பித்
திண்ணியமக்கடங்களையீன்றுதேங்கியபோகமுந்துய்த்துத்
தண்ணியவெமதுதிருவடிநிழலிற்றங்குதிபின்னெனத்தணந்தான். (உங)

ஆங்கவன்களிப்பெனருங்கடண்மூழ்கியமலனதருள்வழிநின்றே
வீங்குநீருததியுடுத்திடுமுலகைவிண்ணவர்க்கரசெனக்காத்துத்
தேங்கியபோகம்பற்பலநுகர்ந்துதிகழுறுமுத்தியும்பெற்ருன்
பாங்குறுதவத்தீர்பங்கயண்குண்டப்பரிசினையுரைக்குதுங்கேண்மோ. (உச)

## வேறு.

துலங்குவாலறிவின்மிக்கதொன்மறைக்குலத்துவந்தா
னிலங்குநூன்மார்பன்வைகாநசனெனுமியற்பேராளன்
மலங்குநோய்பட்டதாதைமண்டனிலிறக்கக்கண்டுங்
கலங்குறுதிருந்தான்சீமார்கலிங்கநாடதனிலுள்ளான், (உரு)

பிணிப்பகைநாடவல்லபெற்றிமையுடையாற்பேணித்
தணிப்பதற்கெண்ணமில்லான்றுதைதன்வருத்தங்கண்டா
னணித்தெனப்பிரமதோடமடைந்திடவழிந்தான்சிந்தை
யெணிற்றனையின்றுனன்றியிலங்குறுதெய்வமுண்டோ. (உசு)

மற்றவன்குருவாங்க்ராகியாயனமுனிவன்மாடே
யுற்றதையுரைத்தலோடுமும்பரும்போற்றற்கான
நற்றிரிவேணிதீர்த்தம்நான்முகன்குண்டந்தோய்ந்து
மித்தகுபிதிரையெண்ணியெள்ளுநீரிறைக்கப்போமால். (உஎ)

என்றருள்குரவன்பாதமிறைஞ்சினனேகியாங்கண்
துன்றுபேரன்புகொண்டுதுலங்குறநானஞ்செய்யா
வன்றவன்சொல்லின்வண்ணமரியதர்ப்பணமுமாற்றி
மன்றினினடனநாதன்மலர்க்கழல்வழுத்தினனே. (உஅ)

வழுத்துறுமானுங்காட்சிவயங்குறவளித்தானந்த
தொழத்தகுவேதியன்றுன்றுகளறுவரங்கள்பெற்றே
விழுத்தகுதனதுதேசம்விரைந்தனன்றீர்த்தமாண்பை
யெழுத்தினுலிணைக்கலாகாதிறைஞ்சிடப்படுவமாதோ. (உகூ)

அரனபிடேகமுன்னியாக்கியநந்திகுண்டத்
துரமதையுரைக்கவின்னுமுளத்தினிற்கொண்டேநீவிர்
சிரமதில்வகித்துக்கேண்மின்சிக்குச்சம்சாரபந்த
மரமதுநடந்தகாழ்கொளயமெனலாகுமன்றே. (௩௦)

சீகரனென்னுநாமச்சிர்மறையோன்முற்காலத்
தேகுறுமிளமைதொட்டேயேசுறக்கொடியனென்று
வாகுறுமெவரும்பேசவருமுலைப்போகம்விற்குந்
தோகையாளொருத்திமீதிற்றுலங்குநன்னேசம்பூண்டான். (௩க)

தந்தையாலீட்டப்பட்டதனமெலாமவட்கேதந்து
சிந்தையாற்கள்ளுமூனுஞ்செறிந்தனனுணர்வுமாய
வந்திசேர்பகலிராவென்றறிந்திடானணிந்தசேக்கைத்
தொந்தமார்கலவிப்பூசற்றொடுத்தனன்றுஞ்சமன்னே. (௩உ)

இவ்வணமாண்டுமூன்றங்கேகிடவந்தணன்றான்
மெய்வணங்கழலச்செய்யும்வெய்யவைராவணப்பே
ருய்வணமில்லாநோயாலொழிந்தனனுயிரைப்பற்றிக்
கைவணங்காட்டியார்த்தார்காலனர்தூதராங்கே. (௩௩)

மங்கையர்மோகமென் னுமடுவினிலழுந்தப்பட்டார்
சங்கையில்வேள்வியா திதகவுறச்சமைத்தாரேனும்
மங்குவாரவரேகண்டீர்மானிலவரைப்பினுள்ளார்க்
கங்கதுபோலுந்தீயவளிப்பனவுண்டோவில்லை. (ரு௪)

கழுவினனில்லைபாவங்காய்ந்திடுமளற்றினின்றுங்
குழுமியமலத்தையுண் ணுங்குறுநடைப்பன்றியாகி
வழுவியபிறப்பினுள்ளேவழுவியஞமலியாய்ப்பின்
றழுவுவேசரியுமாகித்தாணியிற்சரித்தான்மாதோ. (ருரு)

தூசுண்டமாசுதீர்க்குந்துறையினன்காலிற்பூட்டு
மேசுண்டதும்பினோடேயெற்றுண்டுமிழ்ந்தகந்தைக்
காசுண்டசுமையைத்தூக்கிக்கடவுறுமாற்றிற்சென்று
தேசுண்டவிடபப்பேர்கொடிருக்குளம்புகுந்தானங்கே. (ரு௬)

நாவதுவறண்டுநன்னீர்நண்ணின்பருகலோடு
மாவதினுருவநீங்கிமண்ணிடைமலினம்போக்கிச்
சாவுடன்பிறப்புநீக்குஞ்சங்கரனருளுங்கேழ்கொள்
காவதுநெருங்கப்பெற்றகயிலையம்பதியிற்புக்கான். (ரு௭)

மாற்றிலாப்பொன்னினாட்டுமன்னவனன்னீர்மேன்மை
யாற்றயாமுரைப்பக்கேண்மினங்கதன்கரையின்மேனாட்
போற்றுறுசைசல்யப்பேர்ப்புரவலன்புரமூன்றட்ட
வேற்றனைக்கருதியாகமெண்ணிலவியற்றினனே. (ரு௮)

ஆங்கதன்பயனுற்கற்பவைந்தருநீழல்வைகிப்
பாங்குறுபோகமெல்லாம்பரிவுடனுகர்ந்தான்மேனாள்
வீங்குமத்தெய்வநன்னீர்விழைவுடனாடினுக்கந்
தேங்கியவமுதமுண் ணுந்தேவராய்ப்பிறப்பர்மெய்யே (ரு௯)

கும்பயோனியினில்வந்தகுறுமுனிதடத்திலுற்று
வம்புவிநாளினனமடைவுறப்புரிந்துளார்க
ளிம்பரிலெவரும்போற்றுமிருந்தமிழுணரப்பெற்றே
யும்பருந்தேடிக்காணுவோங்கரன்பதத்திலுய்வர். (௬0)

ஆக்கமேயளிக்குங்காத்தியாயனனணிகொடீர்த்தத்
தூக்கியேதோய்ந்துமாயனொளிமலர்க்கழலைப்போற்றில்
வாக்கினன்மொழிதற்கொண்ணுவான்பதம்பெறுதலோடு
தாக்கணங்கனையபெண்ணைத்தான்பெறலாகுமன்றே. (௬௧)

அரனரியுருவமானவத்தலத்தன்னார்தம்மை
விரவினர்பிரித்தெண்ணாமல்விருப்பொடுபூசைசெய்யி
னுரனிடைநினைந்தவெல்லாமுறுவராங்குளத்திலுன்னார்
நரகிடைக்கிடந்துபல்கானலிகுவர்சரதமாக. (சஉ)

ஆதியாமுநத்திற்பற்கினெனவறைமுனிவனன்பாற்
பூதலத்துளவாந்தெய்வப்புனிதநீரெல்லாந்தோய்ந்து
காதலார்பிதுரருண்ணக்கரிசறுபிண்டமாதி
மாதிரத்தெவருமெச்சமல்குறவளித்துப்போந்தான். (சங)

ஆயிடையாலகண்டற்கன்புறுதலமென்றோது
மாயிரும்பெருமைவாய்ந்துமன்னுமத்தலத்திற்புக்கு
வேயிடைமணிகள்காலும்விழைதிரிவேணிதீர்த்தம்
வாயுறப்பொருந்திநானம்வழுவறச்செய்தானாகி. (சச)

தேன்புலக்கடவுணச்சத்திகழுறப்பிண்டநீரி
லன்புடனளித்தலோடுமாங்கவன்பிதுர்க்களெல்லாந்
துன்புறுபிறவியென்னுந்தொடுகடற்பரப்பைநீங்கி
யின்புறுசிவமாந்தத்துவத்தினையெளிதினுற்றார். (சரு)

இன்னனமகிமைவாய்ந்தவிருந்தலமதுபோலிந்த
மன்னியவுலகிலில்லைமற்றதன்மான்மியத்தைத்
தன்னனதகைமைசான்றதாவறுமுனிகாணீவிர்
துன்னியவன்பினாலேதுரிசறக்கேட்டின்புற்றீர். (சசு)

என்றருள்சூதமேலோனியம்பியவனைத்துங்கேட்டுத்
துன்றியவன்புபொங்கித்தூயநன்முத்திக்கேது
வின்றருள்புரிந்தாயெம்போலியற்றவஞ்செய்தாருண்டோ
நன்றியஃதினியென்வல்லேம்நண்ணியாமியற்றற்கென்றே (சஎ)

இயம்புறுமுபசாரங்களெல்லவும்புரிந்துபோற்றி
நயம்பெறுமன்னானேடுநாடினரலைகள்கூடு
மயம்புகல்வினையைக்கொய்யுமப்பதிபுகுந்தங்காடும்
வயம்பெறுமொருவன்பாதம்வழுத்துவானுங்களுள்ள. (சஅ)

திரைசெறிதீர்த்தமியாவுந்திதறுவிதியின்மூழ்கிக்
கரைசெறிவெண்ணீறிட்டுக்கழுத்திற்கண்மணியணிந்தே
யுரைசெறியக்கரங்களோரைந்துமுன்னியுன்னித்
தரைசெறிபுகழ்களெல்லாந்தம்புகழாக்கிக்கொண்டே. (சகூ)

பற்றினையொருவியாங்கண்பன்னெடுநாட்கடங்கி
நற்றவரியாருநம்பனல்விடைபெற்றுத்தங்க
ளூற்றிடமாகுநைமிசாணியமுவப்பிற்புக்குக்
கற்றதன்மாண்பினுலேகரிசறவவிர்ந்தார்மாதோ. (௫0)

இத்தலபுராணந்தன்னையெழுதினேரெழுதுவித்தோர்
பத்தியாற்படித்தோர்கேட்டோர்பண்புறமுருத்தந்தோர்வோர்
கொத்துறமலரைக்கொண்டுகுயிற்றினர்பூசைகற்குஞ்
சத்தியர்க்குதவிசெய்யுஞ்சால்பினையுடையோரெல்லாம். (௫க)

இம்மையிற்பெறுவதானவியன்மனைமக்களோடு
செம்மைசேர்நிதிகளெல்லாஞ்செறிந்திடப்பெற்றாராகி
யம்மையிலடியருய்யவருணடம்புரியுநாதன்
றம்மைநேர்பாதஞ்சார்ந்துதாவருமின்பந்துய்ப்பார். (௫உ)

மறையவர்வேள்விமல்கமன்னவன்செங்கோலோங்க
குறைவறக்கொண்டல்பெய்ககுவலயத்தறந்தழைக்க
நறைகமழுங்கல்வேணிநடனவல்லபன்றாள்வெல்க
நிறையலைகூடுமாற்றூர்நெடும்பதிநீடுவாழ்க.

தீர்த்தமகிமைப்படலம் முற்றும்.

ஆகப்படலம்கஉ-க்குச் செய்யுள் ௫௬உ

---

திருக்கூடலையாற்றூர்ப் புராணம் முற்றும்.



# பிழையுந் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| முகவுரை. | 10 | களும் | களாலும் |
| | 21 | ரவர் | யாரவர் |
| 2 | 1 | சடைமை | சடைமே |
| | 7 | குறல் | குறள் |
| | 10 | யால் | யாள் |
| 3 | 9 | விஞ்ஞை | விஞ்சை |
| 4 | 9 | தாரிரயா | தாரியரா |
| 5 | 29 | கருதுரு | கருதுறு |
| | 32 | னெனங் | னெனச் |
| 6 | 14 | பவருங் | பவங் |
| | 18 | ஞாருண | ஞாலுண |
| 7 | 11 | றலால்த் | றலால் |
| 8 | 8 | னவர் | னமர் |
| | 10 | பூட | பூஉ |
| | 21 | விவனே | விவணே |
| | 22 | மீண்டுறலே | யீண்டுறலே |
| | 24 | வினையிர் | வினையிற் |
| | 30 | வடிவீ | வடிவி |
| 9 | 2 | குநற் | குஙர் |
| | 4 | ணிற்ல | ணிற்பல |
| | 7 | சிதைத்துமச் | சிதைத்துச் |
| | 8 | ஞுறுமம் | ஞுறுமம்ம |
| | 9 | தன் | தண் |
| | 19 | பள்கி | பளகி |
| | 22 | முருதா | முறுதா |
| | 27 | வாலி | வாவி |
| 10 | 11 | சால | சார |

## நூல்.

| | | | |
|---|---|---|---|
| 1 | 11 | மரிதி | மருளி |
| 2 | 21 | பாதக் | பாத |
| 3 | 15 | யாடி | யாடிக் |
| | 29 | னுணர | லுணர |
| 5 | 18 | தலை | தலைக் |
| 6 | 8 | நண்ணி | நண்ணிப் |

# பிழையுந் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| | 12 | துன்னி | துன்னித் |
| 7 | 2 | னுண்மை | னுண்மைப் |
| 7 | 13 | ரென்ன | ரென்னப் |
| 7 | 22 | னாற்றி | னாற்றிக் |
| | 28 | முத்தி | முத்திச் |
| 8 | 23 | தாண்ட | தாண்டப் |
| 9 | 29 | பேத | பேதத் |
| 13 | 6 | மசட் | மகட் |
| 14 | 3 | மன்னற் | மந்நற் |
| | 8 | மயங்கி | மயங்கித் |
| 16 | 16 | தருள் | திருள் |
| 18 | 20 | குவல் | குதும் |
| 19 | 27 | அவந்தியேயா | அவந்திகழாதவைவவைகைப் |
| | 28 | தியைவகைப்புரங் களமைத் தருள்புரிவதேவெமக்கே யுவந்தனை | புரங்களேம்முகங்களிலமைத் தருள-லுவந்தனை |
| 21 | 20 | யெரி | னெரி |
| 23 | 17 | சோவ | நோவக் |
| 27 | 5 | யீவ | னீவ |
| 28 | 24 | யுடை | யுடு |
| 31 | 15 | பென | யொடு |
| 35 | 26 | யாய்க்காத்தி | யாய்த்திராகி |
| 36 | 3 | தலை | திலை |
| 37 | 1 | திரு | திரி |
| | 28 | அற | வர |
| | 18 | காணுங் | காணுந் |
| 41 | 4 | கின்கருதனுஞ் | கில்கருதறுஞ் |
| 42 | 7 | லுக | லுலக |
| 44 | 24 | பாட | பாடத் |
| | 25 | குதும்யாங் | குதுமால் |
| 45 | 13 | வானி | வாளி |
| 47 | 10 | வாங்கி | வாங்கித் |
| 48 | 12 | வாய் | வாய்ப் |
| | 17 | கோதி | கொதி |
| 50 | 20 | லுற்று | லுற்றுப் |
| 51 | 23 | பேறி | பேறிப் |
| 53 | 28 | வுழை | வுழைச் |

# பிழையுந் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 53 | 29 | னுரு | னுருச் |
| 56 | 28 | கௌக்ஷீ | கௌஷீ |
| 57 | 4 | விலாயாகம்பல்ல | வில்பாசுபதயாகங் |
| 59 | 5 | தன | தள |
| 61 | 7 | ஞதி | ஞதித் |
|  | 21 | கூறி | கூறு |
|  | 25 | மேணுறவ | மிலிங்கமோட |
| 65 | 29 | யெற் | மெற் |
| 66 | 10 | தம்மா | தம்மாப் |
| 67 | 22 | யோனே தான் முன் | யோசனே தான் மூன் |
|  | 25 | பெற்றச் | பெற்ற |
| 68 | 12 | கண்டி | கண்ட |
|  | 13 | ஞன் | ஞ ன |
|  | 30 | கண்ணி | நண்ணி |
| 70 | 2 | தவ | தவப் |
|  | 7 | ரோன்றி | ரோன்றிக் |
| 71 | 5 | ஞேடு | ஞெடு |
| 72 | 7 | துரீங்கா | துயரீங்கா |
|  | 8 | துயரீங்கா | துப்போந்து |
| 73 | 28 | துயவி | துயிலி |
|  | 30 | முணர் | முணர்ந் |
| 74 | 32 | லல்வி | லவ்வி |
|  |  | யாவற் | யாமற் |
| 75 | 18 | மன | மண |
|  | 27 | தவத் | தலத் |
| 76 | 27 | வீந்த்ர | விந்த்ர |
| 77 | 20 | மவிர | மவிரத் |
|  | 25 | றேவீ | றேவி |
| 78 | 1 | டளே | டலே |
|  | 7 | ருணர் | வுணர் |
|  | 11 | திடங் | திடச் |
|  |  | தரக்கு | தாக்கு |
|  | 19 | விலா | விலாவந்த |
|  | 28 | னில்வான் | னில்லான் |
|  |  | கண்டலர் | கண்டவர் |
| 79 | 16 | சாரூே | சாறூ |
|  |  | நிகழ்த்த | நிகழ்த்தி |

## பிழையுந் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 79 | 26 | கடண் | கடன் |
| | 29 | கயண் | கயன் |
| 81 | 14 | ணின் | ணினன் |
| 82 | 16 | கமழங் | கமழலங் |



